பகவான்

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகள்

## சரித்திரமும் உபதேச மொழிகளும்






ஸ்ரீ ரமணாச்ரமம்,
திருவண்ணாமலை.

பகவான்

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகள்

## சரித்திரமும் உபதேச மொழிகளும்.



ராமநாதபுரம் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர்

திருவாளர் K. கோபாலபிள்ளை யவர்கள் குமாரர்

G. ஷண்முகம், B.A. B.L.

எழுதியது.







மூன்றாம் பதிப்பு

திருவண்ணாமலை, ஸ்ரீ ரமணாச்ரமம், ஸர்வாதிகாரி
நிரஞ்ஜனானந்த சுவாமிகளால்
பிரசுரிக்கப்பட்டது.

1937



ஸ்ரீ பகவான் ரமணமஹர்ஷிகள் (இளம்பிராயம்)

ஓம்

# முன்னுரை.

இப்பூவுலகின் இதயமெனப்பிரசித்தியுற்றதும் நினைக்க முத்தி யளிக்கவல்லதும், ஞானத்தபோதனரை வாவென் றழைப்பதுமாகிய தேஜோலிங்க திவ்யத்தலமாந் திருவருணையின் தென்றிசைச் சாரலில் தக்ஷிணாமூர்த்தியெனத் திருமேனிகொண்டு தமது திவ்ய ஞானவொளியை இடையரு தியல்பாகவே திசையெங்கும் வீசும் திருவருட்செல்வராம் பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளை யறியாதவர் நமது தமிழ் நாட்டில் இலரென்றே கூறலாம். அன்னார் சரிதை தமிழ், தெலுங்கு, ஆங்கில மென்னும் பாஷைகளில் அன்பர் பலரால் பல சமயங்களில் வெளியிடப்பட்டுளது. இப்பொழுது, ஸ்ரீ ரமண பகவானது மெய்யன்பர்களிலொருவராகிய திருவாளர் G. ஷண்முகம்பிள்ளை சரிதையுடன் உபதேச மொழிகளையும் எளிய நடையிலியற்றித் தமிழுலகிற் களிக்கின்றார். இச்சரிதை இதன்முன், சென்னை 'லோகோபகாரி' பத்திரிகையில் வெளியிடப்பட்டுளது. உபதேச மொழிகள் பல்வேறிடங்களிலிருந்து விஷயத்தை யனுசரித்து ஒருங்கே திரட்டப்பட்டனவாகும். இவ்வருட்பணியாற்றிய நமது நண்பராம் இந்நூலாசிரியருக்கு யாமென்றுங் கடமைப்பட்டுளோம். அன்பர் யாவரும் இந்நூலை யேற்றுப் பேருவகை யெய்துவாரென்பது திண்ணம்.

திருவருணை,
23—11—31.

இங்ஙனம்,
பாரத்வாஜ - விச்வநாதன்.

# இரண்டாம் பதிப்புரை.

---

இந்த இரண்டாம் பதிப்பில் ஆசிரியர் பல சீர்திருத்தங்கள் செய்திருப்பதோடு ஐரோப்பிய அன்பர்களைப்பற்றிய சில விஷயங்கள் சேர்த்துள்ளார். தவிர பகவான் திருவுருவப்பட மிரண்டுடன் அவர் பெற்றோர்கள் படமும் மேனாட்டு பக்தர்கள் படமும் சேர்த்துள்ளன. இப்பதிப்பை அன்பர்கள் மனமுவந்து ஏற்று ரமணாநந்தம் பெறுவாரென நம்புகிறேன்.

நிரஞ்ஜனானந்த ஸ்வாமி.

# விஷய சூசிகை.




ஓம்

பகவான்

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகளின்

சரித்திரம்

ஓம்

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகளின் சரித்திரம்

---

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்(து)
இறந்தாரை யெண்ணிக் கொண்டற்று"—

என்ற தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் திருவாக்கின்படி உலக மாயையாகிய, *காமினி, காஞ்சனம், இரண்டையும் அறவே துறந்த பெரியோர்களின் பெருமை சாலவும் பெரிது. இத்தன்மை வாய்ந்த மகா புருஷர்களின் சரித்திரம் நம்போன்ற மானுடர்களுக்கு சம்சார சாகரத்தைக் கடக்க ஓர் அரிய தெப்பமென்பதிற் சிறிதும் ஐயமில்லை.

திருவண்ணுமலையானது பஞ்சபூத ஸ்தலங்களில் தேயு ஸ்தலமாகும். அயனும் அரியும் சிவபெருமானது அடிமுடி காணுது அவஸ்தைப்பட்டதும், நினைக்க முத்தி தரவல்லதெனப் பெரியோர்களால் புகழப்பட்டதுமான இத்தலத்தின்கண் பல ஜீவன்முத்தர்கள் திகழ்ந்திருந்தனர் என நாம் சரித்திர வாயிலாக அறிகிருேம். இன்று ஜீவதசையில் வீற்றிருக்கும் மகான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகள் எனத் தவப்பெயர் பூண்ட பெரியார்.

## பிறப்பும் இளமைப்பருவமும்.

இவர் மதுரைமா நகருக்கு சுமார் 30 மைல் தூரத்திலுள்ள திருச்சுழியல் என்னும் ஸ்தலத்தின்கண் இருந்தவக்கீல் ஸ்ரீமான் சுந்தரமையர் என்ற பிராமணேத்தமருக்கும்

---

* காமினி, காஞ்சனம் = பெண்ணுசை, பொன்னுசை.

அழகம்மை யென்ற அவர் தருமபத்தினியார்க்கும் கலி 4980 பிரமாதி வருஷம் மார்கழி மாதம் 16உ (30th December 1879) சோமவாரம், புனர்பூச நக்ஷத்திரம் உதயாதி 48 நாழிகைக்கு மேல் துலாலக்னத்தில் குருதசை 5 ௵ 6 ௴ சேஷ மிருக்கையிற் பிறந்தார். ராசிசக்கிரம் அடியில் வருவாறு :—

| | | | |
|---|---|---|---|
| சனி | செ | | சந் கே |
| குரு | ராசி | | மாந்தி |
| | சக்கிரம் | | |
| ர ரா | சு பு | ல | |

இவர் அவதரித்தநாள் திருவாதிரையாகிய ஆருத்ரா தரிசன நன்னாள். அவதார புருஷர்கள் இவ்வுலகில் தோன்றுங் காலத்து ஓர் அற்புத நிகழ்ச்சி நடப்பதுண்டு. அங்ஙனமே இவர் பிறந்தநாளன்று பிரசவம் பார்க்கவந்த கண்தெரியாக் கிழவி ஒரு பேரொளி கண்டாள். இவர் இயற்கைப் பெயர் வேங்கடராமன். இதிலுள்ள 'ராமன்' என்பதுதான் பிற்காலத்தில் 'ரமணன்' எனத் தவப் பெயராகத் திரிந்தது. தமது சிறுவயதில் இவர் சரீரப் பயிற்சி முதலிய விளையாடல்களில் அதிக ஊக்க முடையவராக இருந்தாரேயன்றிப் படிப்பில் அவ்வளவு அக்கரை காட்டவில்லை. ஆயினும், ஒருவர் சொல்லக் கேட்டவற்றை அப்படியே ஒப்புவிக்கும் அபார ஞாபகசக்தியும் ஏகாக்கிரதன்மையும் வாய்ந்த மேதாவி. முதன் முதலில் திருச்சுழி எலிமெண்டரி பாடசாலையிலும் பிற்பாடு திண்டுக்

கல்லில் 5-ம் வகுப்பும் மதுரை ஸ்காட்ஸ் மிடில் ஸ்கூலில் 6-ம் வகுப்பும் படித்தார். அப்பொழுது இவர் தந்தை காலமாகவே, இவர் தம் சகோதரர்களுடன் சிறிய தந்தையர்களாகிய சுப்பையர் நெல்லையப்பையர் இவர்கள் ஆதரவின்கீழ் வளர்ந்து வந்தனர். அமெரிக்கன் மிஷன் ஹைஸ்கூலில் பத்தாவது (Sixth Form) வரை படித்தார். சமய நூல்களிற் பெரிய புராணத்தைத் தவிர வேறு ஒன்றையும் இவர் அக்காலத்தில் அறியார்.

ஆனால் தமது பால்ய வயது முதற்கொண்டே இவருக்கு அருணாசல ஸ்மரணை தன்னில் தானாகவே உண்டாயிருந்தது. அருணாசலம் என்பது வைகுண்டம், கைலாயம், சுவர்க்கம் முதலியவற்றிற்கும் மேம்பட்டதாயும், எவராலும் அடைதற்கரியதாயும் இவர்க்கு விளங்கிற்றேயல்லாது அது பூமண்டலத்திலுள்ள ஒரு சிவஸ்தலமென அறியார். பூரண தேவானுக்கிரகத்தினால் மானுட குரு வில்லாமல் பேரருளாலே தமது யதார்த்த நிலையை அடைந்து ஜீவன் முத்தராய்த் திகழவே இவருக்கு அருணாசல ஸ்மரணை தன்னில் தானாய் உண்டாயிற்றுப்போலும்! இங்ஙனம் சிலகாலம் சென்றது. பிறகு மன்மத வருஷம் கார்த்திகை மாதத்தில் (November 1895) ஓர் நாள் தமது உறவினர் ஒருவரால் திருவண்ணாமலையே அருணாசலமெனத் தெரியலானார். பின்னர் இதைப்பற்றி இவர் ஒரு பொழுதுஞ் சிந்தித்திலர்.

## ஞான உதயமும் துறவும்

பல மாதங்களுக்குப் பிறகு துர்முகி வருஷாரம்பத்தில் தமது திருமேனியில் ஓர் எரிச்சலுடன் தீவிர மரண

பயமும் இவருக்குத் திடீரென உண்டாயிற்று. ஜன்மாந்தர புண்ணிய பரிபாகத்தினாலோ அல்லது அவதார புருஷன் என்ற காரணத்தை முன்னிட்டோ இவ்வகையான தெய்வீக வுணர்ச்சி இப்புண்ணிய சீலருக்கு உண்டாகி ஞான ஏதுவாயிற்றுப் போலும்! அநேகமாய் ஒவ்வொரு அவதார புருஷரும் ஏதோ ஒரு வெளித் தூண்டுதலிற்றான் ஞானநிலையை நாடினதாகத் தெரிகிறது. உதாரணமாக, அவதார புருஷராகக் கருதப்படும் புத்தபகவான், தமது அழகிற் சிறந்த வாழ்க்கைத்துணைவியாகிய யசோதரையுடன் ராஜபோகங்களை இன்பமாக அனுபவித்து வரும் நாளில், பிணிவாய்ப்பட்டுத் துன்புறும் ஒரு குஷ்டரோகியையும், மூப்பினால் தள்ளாடிக் கஷ்டப்படும் ஒரு வயோதிகனையும், மயானத்திற்குக் கொண்டுபோகப்படும் பிணமொன்றையும் முறையே கண்ணுற்றார். இக் காட்சிகளே இவர் உடனே துறவறம் மேற்கொள்ளவும், அதன் பயனாக நிர்வாண பதவியைப் பெறவும் ஏதுவாயிற்று. அங்ஙனமே ரமணருக்கு அத்தூண்டுதல் மரணபயமாக வந்ததெனக் கூறலாம். அதன் பயனாக இவர் தமது சரீரத்தைப் பிரேதமென பாவித்தார். அதனால் தேகாத்ம புத்தி தம்மிடமிருந்து பூரணமாய் விலக, உண்மையான 'நான் யார்' என்ற விசாரம் இவருக்குத் தன்னில் தானாய் உதிக்கலாயிற்று. இவ்வகையான ஆத்ம நிஷ்டையின் பயனாக இவர் மனம் சொரூபப் பிரகாசத்தில் லயித்து அந்த ஆத்ம சக்தி "நான் நான்" என்று தானாகவே உள்ளத்தில் ஸ்புரிக்க ஆரம்பித்தது. (வேதாந்த பரிபாஷையில் இந்நிலையை 'அஹம் ஸ்புரிப்பு' என்றும் 'ஆன்ம விஞ்ஞான' மென்றும் சொல்லுவார்கள்.)

இந்த ஆச்சரிய சம்பவம் நடந்த பின்பு இவர் வாழ்க்கையிலும் நடத்தையிலும் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. ஏகாந்தப் பிரியமும், தாழ்வு, பொறுமை முதலிய குணங்களும் இவரிடம் அதிகரித்தன. மேலும் இவர் அடிக்கடி ஆசனத் தமர்ந்து கண்மூடி நிஷ்டை கூடுவார். மதுரை மீனாக்ஷிசுந்தரேசுவரர் ஆலயத்துக்குச் செல்லும்போதெல்லாம் அங்குள்ள அறுபத்துமூவர் முன்னும், வெள்ளியம்பலத்திலுள்ள நடராஜர் சந்நிதி முன்னும் அன்பினால் பரவசப்பட்டு அகநெக்குருகிக் கண்ணீருகுப்பார். இங்ஙனம் சுமார் ஆறு வாரங்கள் கழிந்தன.

பின்னர் ஒருநாள் அதாவது அதே துர்முகி வருஷம் ஆவணி மாதம் (29-8-1896) சனிக்கிழமை யன்று இவர் பெயின் என்பவர் எழுதிய ஆங்கில இலக்கணத்தி (Bain's English Grammar) லிருந்து ஒரு பாடத்தைப் பார்த்து எழுதிக்கொண்டு இருந்தார். அன்று உபாத்தியாயர் தந்த பாடத்தை சரியானபடி உருத்தள்ளாதபடியால் இத்தண்டனை விதிக்கப்பட்டு இருந்தது. மனம் அதன் உற்பத்தி ஸ்தானத்தையே நாடும்போது எங்ஙனம் பள்ளிப்பாடங்களைப் படிக்க முடியும்? இவர் இரண்டுதரம் எழுதியவுடன் மனம் அகமுகப்படவே நிஷ்டையில் கண்மூடி உட்கார்ந்து விட்டார். இதனைக் கண்ணுற்ற இவர் தமையனார் நாகசாமி ஐயர் என்பார் இவரைத் திருத்துங் கருத்துடையராய், "இப்படிக்கேல்லாம் இருப்பவனுக்கு இங்கேன்ன வேலை?" எனக் கடிந்துரைத்தார். இதனைத் தெய்வ வாக்காகக் கொண்ட ரமணர், தமக்குத் திடீரென்று தற்செயலாய்ப் பழைய அருணாசல ஞாபகம் வரவே, திருவண்ணாமலைக்குப் போவதே சரியெனத் தீர்மானித்தார். மின்சார சக்தியை

விளக்குவதற்காகத் தம்மை உபாத்தியாயர் அன்று பள்ளிக்கு வரச்சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. உடனே அதைப்பற்றித் தமது தமையனிடம் பிரஸ்தாபிக்க, அவர் தம்முடைய சம்பளத்தை எடுத்துக்கொண்டுபோய் உபாத்தியாயரிடம் கொடுக்கும்படி சொல்லி ஐந்து ரூபாய் அவரிடம் கொடுத்தார். அவ்வைந்து ரூபாயில் மூன்றை மட்டும் எடுத்துக்கொண்டு ஒரு கடிதத்தில்

"நான் என் தகப்பனாரைத் தேடிக்கோண்டு அவருடைய உத்தரவின்படி இவ்வூரை விட்டுக் கிளம்பிவிட்டேன். இது நல்ல காரியத்தில் தான் பிரவேசித்திருக்கிறது. ஆகையால் இந்தக்காரியத்திற்கு ஒருவரும் விசனப்பட வேண்டாம். இதைப் பார்ப்பதற்காகப் பணமும் சேலவு செய்ய வேண்டாம். உன் சம்பளத்தை இன்னும் செலுத்தவில்லை. ரூ 2 இதோடு கூட இருக்கிறது.

இப்படிக்கு

————"

என்று எழுதி வைத்து விட்டுப் பழைய தேச பட (Old Atlas) மொன்றின் உதவியால் திருவண்ணாமலையானது திண்டிவனத்திற்குச் சமீபமென்று அறியலானார். வண்டி நேராகத் திருவண்ணாமலை போகும் விஷயம் இவருக்கு அப்பொழுது தெரியாது. ஆகையால் பளிங்கைப்போன்ற சுத்தமான ஹ்ருதயம் வாய்ந்த இவ்வகத்துறவி ரயிலடிக்குச் சென்று திண்டிவனத்திற்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு வண்டியில் ஏறினார்.

ரயில் ஏறிய இப்பெரியார் வேறு எவ்வித நினைவிற்குஞ் சிறிதும் இடங்கொடாது தமது ஆத்ம நிஷ்டையிலே

ஆழ்ந்திருந்தனர். வழியில் ஓர் மஹம்மதிய பெரியார் ஒருவரால் திருவண்ணுமலைக்கு நேராக ரயில்வண்டி போவதாக அறியலானுர். ஆதலின் இவர் விழுப்புரத்தில் இறங்கித் தமது பசிப்பிணியைச் சிறிது ஆற்றிக்கொண்டபின், மிஞ்சின சிறுதொகையைக் கொண்டு பிறவிப்பிணி தீர்த்தற்பொருட்டு மாம்பழப்பட்டு வரையில் வண்டியிற் சென்ருர். கையில் பணமில்லை யாதலின் அங்கிருந்து சுமார் பத்து மைல் தூரத்திலுள்ள அறையணிநல்லூர் என்ற ஸ்தலத்திற்குக் கால்நடையாகச் சென்று ஆங்குள்ள கோயிலுட் புகுந்து ஆழ்ந்த சமாதியில் அமர்ந்திருந்தனர். அங்ஙனம் இருக்குங்கால் இவர் ஒரு ஜோதியைத் தரிசிக்கலானுர். பிறகு அக்கோயில் சுயம்பாகியுடன் சுமார் ஆறு பர்லாங்கு தூரத்திலுள்ள கீழுருக்கு வந்தார். அங்கு வீரட்டேச்வராருக்குப் பூஜை செய்யும் பட்டரைச் சிறிது அன்னம் கேட்கவே, அப்பட்டர் கொடுக்க மறுத்துவிட்டார். பக்கத்திலிருந்த மேளக்காரன் ‘என் பங்கை இவருக்குக் கொடுங்க ஊயா!’ என்று பரிந்து தன் பங்கை அன்புடன் இவருக்கு ஈந்தான்.

மறுநாள் கோகுலாஷ்டமி தினம் (31-8-1896). திருவண்ணுமலையோ இன்னமும் 20-மைல் தூரத்திலிருக்கிறது. ரயில் செலவிற்குக் கையில் பணமில்லை. ஆயினும் திருவருணை ஞாபகம் மேலிட்ட நமது பாலஸ்வாமிக்குத் தகுந்தவழி தென்படாமலா போகும்! அவ்வூரிலுள்ள முத்துக்கிருஷ்ண பாகவதர் என்ற பிராமணரிடம் தமது கடுக்கன்களை அடகுவைத்துப்பெற்ற பணவுதவியால் மறுநாள் (1-9-96) திருவண்ணுமலை போய்ச் சேர்ந்தார்.

## இயற்கைத்தவம்

திருவருணை வந்தடைந்தவுடன் இம்மகான் நேராக அருணாசலேசுவரர் கோயிலுட் புகுந்து சந்நிதி முன் "அப்பனே! உன் உத்தரவுப்படி சந்நிதி வந்தடைந்தேன்" என்று உரைத்து வணங்கிய க்ஷணமே இவர் மேனியிலுள்ள எரிச்சல் நீங்கிற்று. பிறகு அவ்விடமிருந்து ஐயன்குளம் என்ற தீர்த்தக்கரைக்குச் சென்று தமது குடுமி, பூணூல் முதலியவற்றைக் களைந்துவிட்டுக் கௌபீனதாரியாய்ப் பூரணப் புறத்துறவையும் மேற்கொண்டார். அதன் பின்னர், அருணாசலேசுவரர் ஆலயத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தமர்ந்து தவம் இயற்றலானார்.

"ஆத்மாவின் நிலையே துர்லபமான தவம்" என்றும், "அந்த இடைவிடாத் தவத்தினால் பிரதிக்ஷணமும் பரிபாகத்தை அடைகிறான்" என்றும் சொல்லப்பட்டிருக்கிறபடியால் இவர் இயற்றும் தவம் இயற்கைத்தவமெனச் சொல்லலாம். திருவருணை வரும் முன்பே சமாதி நிலையைப் பெற்ற இச் சித்தபுருஷர், தமது பிரஹ்மானுபவத்திற்கு (சமாதிக்கு) யாதொரு இடைஞ்சலும் பிறரால் நேராத வண்ணம் மௌன விரதம் பூண்டு ஆயிரக்கால் மண்டபத்திலே சுமார் மூன்று மாத காலம் தவமியற்றி வந்தனர். இவரது கடுந் தவத்தையும், திடவைராக்கிய சீலத்தையும் கண்ணுற்ற பலர், இவரை ஓர் பெரியாரென அறிந்து கூட்டமாக இவர் தரிசனத்தின் பொருட்டு வரத் தலைப்பட்டனர். ஜனக் கூட்டம் தமது சமாதி (நிஷ்டை)க்கு ஒரு பெருந்தடை யென்பதை உணர்ந்த இவர், அவ்வாயிரக்கால் மண்டபத்திலேயே மறைவாயுள்ள பாதாளலிங்கம், சிவகங்கைக்குத் தென்புற

மூள்ள இலுப்பைமரத்தடி, கோபுரங்கள், வாகன மண்டபம், வாழைத்தோட்டம், சுப்பிரமணியராலயம், குருமூர்த்தம், மாந்தோப்பு, பவளக்குன்று முதலிய இடங்களை முறையே தமது தவச்சாலைகளாக மாற்றிக்கொண்டே வரலாயினர். அதன் பின்னர், அவ்வூர் மலையின்கண்ணுள்ள நமசிவாயர் குகை, திருமுலைப்பால் தீர்த்தக்கரையிலிருக்கும் மாமரக் குகை, விருபாக்ஷ குகை, கந்தாசிரமம் முதலிய இடங்களி லும் வசிக்கலானார்.

குருமூர்த்த மென்னும் சமாதிக் கோயிலில் இவர் சமாதி( நிஷ்டை) புரியும் நாளில், வேங்கடராமையர் என் னும் பக்த ரொருவர் நாள்தோறும் தவறாது சுவாமிகளைத் தரிசித்துப் போவது வழக்கம். ஒருநாள் அவர், சுவாமி களை ஊர் பெயர் எழுதித் தரும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ள, இவரும் அவ்வேண்டுகோளுக் கிணங்கி, ‘ திருச் சுழியல்’ என்று எழுதிக்காட்டினர். இது சங்கதி அந்த சமாதிக் கோயிலிலுள்ள அண்ணாமலைத் தம்பிரான் என்ற துறவியும் அறிவார். சில நாட்களுக்குப் பிறகு ஏதோ காரியார்த்தமாக மதுரை சென்றிருந்த அண்ணாமலைத் தம் பிரான் மூலமாக சுவாமிகள் திருவண்ணாமலையிலிருக்கும் விஷயம் சிறியதந்தை யாகிய நெல்லையப்பையர் அறிய லானார். சிறிய தந்தையும் சுவாமிகளைத் தம்மூர்க்கு அழைத்துச் செல்லலாமென்ற விருப்பத்துடன் திரு வண்ணாமலை வந்தார். அப்பொழுது சுவாமிகள், அருகி லுள்ள மாந்தோப்பில் அமர்ந்திருந்தனர். இத் தவப் பெருந்தகையின் அரிய நிலையினைக் கண்டு இரு விழிகளி னின்றும் நீர் ஆறாகப் பெருகவிட்டு நெடுநேரம் சந்நிதியில் நின்றும், யாதொரு பதிலும் நெல்லையப்பையர் பெற்றிலர்

அதனால் இஞ் ஞானக்கிழவர் ஊர்திரும்பாரென அறிந்தவராய், அவர் தமது ஊருக்குத் திரும்பிச் சென்றார்.

இப் பெரியார் இங்ஙனம் சாந்தமென்னும் கவசம் பூண்டு, எவ்விதத் தடங்கல் வரினும் எதற்கும் அஞ்சாத நெஞ்சம் வாய்ந்தவராய், இடைவிடாது இராப்பகலாய் தமது சமாதி நிலையிலே ஆழ்ந்திருந்தனர். தமது மௌன விரதத்தையும் விடாமல் ஊரினுட் சென்று வீடுதோறும் கைதட்டி அதனால் வரும் பிக்ஷைகளை உண்டுவந்தனர். அன்னாகாரமின்றியும் சிலகாலம் வரை இவர் சுவரில் தீட்டின சித்திரம்போல் அசையாது பேச்சுமூச்சற்று ஆழ்ந்த சமாதியிலே மூழ்கிக் கிடப்பதுண்டு.

"—பதிமோகி
தீக்காட்டி லேல்கொடுக்கச் சென்றவா கண்டக்காற்
றாக்காத தன்றோ தவம்" (ஒழிவிலொடுக்கம்)

என்ற அருண்மொழிப்படி, இவர் தாமியற்றிய இயற்கைத் தவத்தின் பயனாகத் தற்போதத்தை (மனதை) அருணாசலேசுவரருக்கு ஊணாகக் கொடுத்து (அதாவது மனம் சொரூபாகாரமாக நசிக்கப்பெற்று) தாம் ஒன்றோடும் தாக்கற்ற பரிபூர்ண ஸஹஜ நிர்விகல்ப சமாதி நிலையைப் பெற்றார். இதுவே கர்மம், பக்தி, யோகம், ஞானம், முதலியவற்றின் நோக்கமாகும். இவ்வரிய பெரும் பேற்றை இவர் எவ்வருஷத்தில் அடைந்தாரென நாம் திடமாகநிச்சயிக்கக் கூடவில்லை. ஏனெனில் இம்மகான் திருவருணை வந்த வருஷம் 1896. 1902-ல் திரு சிவப்பிரகாசம் பிள்ளை என்பார் ஒருவர் மன்றாடிக் கேட்டுக்கொண்டதின் பேரில், அவருடைய கேள்விகளுக்கெல்லாம் இவர் தக்க விடைகள்

அளித்துள்ளார். அவைகளெல்லாம் 'நானார்' என்ற ஒரு சிறு புத்தகரூபமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அந்நூலில் அடங்கியுள்ள அரிய விஷயங்களை ஆராயுங்கால் சொரூப சாக்ஷாத்கார மடைந்த ஜீவன்முத்தர் நிலையை இவர் தமது 22 அல்லது 23 வயதிற்குமுன்பே பெற்றிருக்கலாம் என்று ஊகிக்க இடமுண்டு. இவரது உயரிய நிலையை உணர்ந்த சிஷ்யர்களில் முதன்மையான திரு. காவியகண்ட கணபதி சாஸ்திரிகளும் பிறரும் இவரை 'ரமணமஹர்ஷிகள்' என்றும் 'பகவான்' என்றும் அழைக்கத் தொடங்கினார்கள்.

## தாயார் வருகை

இங்ஙனம் இவர் ஆனந்தாதீத நிலையில் (ஸஹஜ நிர்விகல்ப சமாதியில்) ஈடுபட்டிருக்குங்கால் இவரை ஈன்றெடுத்த புண்ணியவதியான தாய் அழகம்மையாரும், தமையன் நாகசாமியையரும் திருவண்ணாமலை வந்து, பலவாறுகப் பிரலாபித்து, பகவானைத் தம்மூருக் கழைத்தார்கள். அதற்குப் பகவான் எவ்விதபதிலும் கூறுமல் மௌனமாய் வீற்றிருந்தனர். பக்கத்திலிருந்த பக்தர் திரு. பச்சையப்பபிள்ளை யென்பவர் சுவாமிகளை ஏதேனும் எழுதித் தரும்படி வேண்டிக்கொள்ள, பகவான் அதற்கிணங்கி "அவரவர் பிராரப்தப்பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிப்பன். என்றும், நடவாத தென் முயற்சிக்கினும் நடவாது ; நடப்ப தென்றடைசெய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆதலின் மௌனமா யிருக்கைநன்று." என்று எழுதிக்கொடுக்க, தாயும்தமையனும் மிகுந்த வருத்தத்துடன் தம்மூர் திரும்பினார்கள். ஆயினும் அடிக்கடி வந்து பகவானைத் தரிசித்துப் போனார்கள்.

இவ்வாருக சில வருஷங்கள் மௌனத்துடன் இயற்கைத் தவம் இயற்றியதன் பயனுக சமாதியிலே மிக மிக உயர்ந்த பதவியாகிய ஸஹஜ நிலை (ஜாக்ர சுழுப்தி)யைப் பெற்ற இப் பெருந்தகை, தீவிரமோக்ஷ இச்சையுடன் தம்மைச் சரண்புகுந்த முமுக்ஷுக்கள் கொண்ட ஞானதாகம் தீரும்பொருட்டு இரண்டொரு வாக்கியங்களால் உண்மையினை உபதேசிக்கத் தொடங்கினர். பலாப்பழம் பழுத்து வெடித்தால் ஈக்களை அழைக்கவும் வேண்டுமா? அவை தாமே வந்து மொய்ப்பதுபோல இவர் தபோமகிமையையும் புகழையும் கேள்வியுற்று பலவிடங்களிலிருந்தும் எண்ணிறந்த பக்தர்களும் அன்பர்களும் திருவருணைக்கு வரத் தொடங்கினர்கள்.

மஹர்ஷிகள் இங்ஙனம் மெய்ஞ்ஞான சூரியனுய் விருபாக்ஷ குகையின்கண் வீற்றிருக்குங்கால் அழகம்மையார் இவர்தம் பெரும் புகழைக் கேட்டு,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்ருே னெனக்கேட்ட தாய்" (திருக்குறள்)

என்றபடி பெரிதும் மகிழ்வுற்றவராய் மறுபடியும் (1916) பகவான் சந்நிதி வந்தார். தம்மை ஆதரித்துவந்த தம் மூத்த குமாரர் நாகசாமியையர் இறந்து போகவே தமக்குற்ற ஆதரவு வேறில்லை யென்றுணர்ந்து தாம் பகவான் சமீபத்திலே யிருந்து அவர்தம் திருக்கரத்தினல் அடக்கமாக வேண்டுமென்று இவ் வம்மையார் வேண்டிக்கொண்டு, துறவுபூண்டு காஷாய வஸ்திரத்துடன் ஆங்கே வசிக்கலானர். இவ் வமமையார் மிக்க பரிசுத்த மனம் வாய்ந்தவராய், ஆசிரமத்திற்கு வரும் அன்பர்களுக்கு அமிழ்தினு மினிய

அன்னமும், ஞானச் சுவை ததும்பும் வேதாந்தப் பாடல்களும் சோர்வின்றி வழங்கலாயினர். சிலநாட்களுக்குப் பின்னர், இவரது இளைய சகோதரரான நாகசுந்தரமையர் திருவண்ணுமலை வந்து பகவானையும் அன்னையையும் வணங்கிய பிறகு காஷாயம் பூண்டு "நிரஞ்ஜனனந்த சுவாமிகள்" என்ற நாமத்துடன் அவ்விடமே வசிக்கத்தொடங்கினர். இவரை 'சின்ன ஸ்வாமிகள்' என்றும் அழைப்பதுண்டு.

"எத்தொழிலைச் செய்தாலும் எநவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்" —(பட்டினத்தார்)

என்றபடி இத் தவப்பெருந்தகை பல அன்பர்கள் சதா தம்மைச்சூழ விருந்த போதிலும் தாமரை யிலையில் தண்ணீர் போல் யாதொன்றிலும் பற்ருது தமது ஆத்மாவிலே எப்பொழுதும நிலைபெற்றிருந்தனர்.

## தாயாரது அடக்கம்

மஹர்ஷிகளின் அன்னையார் அவரிடம் வந்தபின் ஆறு வருஷங்கள் இங்ஙனம் கழிந்தன. துந்துபி வருஷம் வைகாசி மாதம் அழகம்மையார் பிணிவாய்ப்பட்டார். பகவான் தமதன்னைக்கு வேண்டிய சிகிச்சை முழுவதையும் செய்தார். இனி நடப்பது நடக்குமென்பதை அறிந்த பகவான் தனது வலதுகையை அன்னையின் மார்பிலும் இடது கையை சிரசிலும் வைத்துக் கொண்டே உட்கார்ந்து இருந்தார். ஹஸ்த தீட்சையால் தமதன்னைக்கு யோகசக்தியை ஊட்டுகிருர் போலும்! அங்ஙனம் தமது கரத்தால் தொட்டுக்கொண்டு இருக்கும்போது அக்கர சக்

திக்கும் எங்கேயோ சொப்பனம்போல் அவளை இழுத்துக் கொண்டு போய்க்கொண்டிருந்த சக்திக்கும், விழிப்பும் கனவுமாக ஒரு போராட்டம் நடந்துகொண்டு வந்து இறுதியில் அஜ்ஜீவ வியக்தி (பிராணசக்தி) உள்ளேயே ஒடுங்கிக் கலந்து விட்டது. அதுவரை ஜலபானங்கூட செய்யாத பகவான் அம்மாள் மஹாசமாதி அடைந்த பின்னர் "இனி நாம் சாப்பிடலாம், வாருங்கள். தீட்டுமில்லை ஒன்றுமில்லை" என்று தம் பக்தர்களுடன் சாப்பிடச் சென்ருர். அன்னை அடங்கின நாள் வைகாசி மாதம் 6-ம் தேதி சுக்கிரவாரம் சதய நட்சத்திரம். மறுநாட் காலையில் மலையடி வாரத்திலுள்ள பாலிதீர்த்தக் கரையில் மஹர்ஷிகள் திருமுன்பு அன்னுர் தாயாரது உடல் பக்த ஜனங்களுடைய பகவந்நாமங்களுக் கிடையில் அடக்கமாக அதன் மீது பிரதிஷ்டை செய்யப்பெற்ற லிங்கம் "மாத்ரு பூதேசர்" என்னும் திருநாமத்தோடு இரண்டு காலம் தினந்தோறும் ஆசிரம வாசிகளால் நியமமாகப் பூஜிக்கப் பட்டு வருகிறது. ஆறுமாதங் கடந்த பின்னர் பகவானும் கந்தாசிரமத்தை விட்டுத் தமதன்னையாரின் சமாதி யருகிலே வசித்து வருகின்ருர். பல அன்பர்களது நன் முயற்சியால் காலக்கிரமத்தில் அவ்விடத்தில் ஓர் அழகிய கட்டிடமும் நந்தவனமும் ஏற்பட்டன. 'ரமணுசிரமம்' என்ற திருநாமத்துடன் அந்த இடம், இன்றைக்கும் பல பக்தர்கள் மஹர்ஷிகளைத் தரிசித்து, தங்கள் சந்தேக விபரீதங்கள் சூரியனைக் கண்ட பனிபோல நீங்கப் பெறுவதற்குரிய ஓர் புண்யஸ்தலமாய்த் திகழ்கின்றது.



Bhagavan



Frank Humphreys



Harry Dikman



Swami Bikku Prajnananda



Paul Brunton

## இவரது ஐரோப்பிய சிஷ்யர்கள்.

பகவானின் பெருமையையும் அரிய நிலையையும் கேள்வியுற்ற மேனாட்டார் பலர் இவரிடத்து மிக்க அன்பு வாய்க்கப் பெற்றவர்களாய்த் திருவருணை வந்து இவரைத் தரிசித்துப் போகிறார்கள். உதாரணமாக 1911-ம் வருஷம் அஸிஸ்டென்டு சூபரிண்டெண்டாக (Assistant Superintendent) வேலூர் வந்த மிஸ்டர் ஹம்பிரீஸ் (Mr F. H. Humphreys) என்பவர் சாந்த மூர்த்தியாகிய மஹர்ஷிகளது சிஷ்யராய், அவர் மார்க்கத்தைப் பின்பற்றுவா ராயினர். இவர் சில வருஷங்களுக்குப் பிறகு இங்கிலாந்து சென்று, தாம் பகவானிட மிருந்து கிரகித்த உபதேச மொழிகளை அங்குள்ள பத்திரிகை (International Psychic Gazette) யொன்றில் வெளியிட்டார். பிறகு ரோமானிய கத்தோலிக் மதத்திற் சேர்ந்து அதன் சந்நியாசியா (Roman Catholic monk) கவே யிருந்து இவர் ஞானப்பியாசம் இயற்றி வருகின்றனர்.

1930 வருடம் லத்வியா (Latvia) என்னும் குடியரசில் குரூ - செம் (Kuru - Zeme) என்னும் நகரில் வசிக்கும் ஹரிதிக்மன் (Harry Dickman) என்பவர் பகவானின் பெருமையைக் கேள்விப் பட்டவுடனே ரமண பக்தியில் மேம்பட்டுத் தனக்கெழும் சந்தேகங்களை ஆசிரமத்திற்கு எழுதி அதற்குரிய பதில்களைப் பெற்றுவருகிறார். "நான் யார்" என்னும் பகவானது உபதேச மொழிகளைத் தனது லத்விய மொழியில் வெளியிட்டுள்ளார். தவிர சமீபத்தில் (1931) லண்டன் பத்திரிகைத் தொழிலாளர் மிஸ்டர் பால் பிரண்டன், '(Mr. Paul Brunton) என்பவ

ரும், ஐரோப்பிய பௌத்த பிக்ஷு ப்ரெடெரிக் ப்ளெச்சர் (Frederic Fletcher) என்ற ஸ்ரீபிரஜ்ஞானந்தரும் ஆசிரமத்தில் பகவான் அருகிலே சுமார் ஒரு மாதகாலம் தங்கியிருந்தார்கள். அதன் பயனாக இவர்கள் சுயம்ஜோதியாய் விளங்கும் ரமணரது மோன நிலையைப் பூரணமாய் அறியலானார்கள். மிஸ்டர் பிரண்டன், தாம் இந்தியாவில் ஞானிகளைத் தேடி அலைந்த அநுபவங்களையும் கடைசியில் ஸ்ரீ பகவான் ரமணரே பூரண ஞானி என்று தாம் அறிந்த உண்மையினையும் விபரமாய் "A Search in Secret India" என்ற புத்தக மூலம் வெளியிட்டார். மேல்நாட்டார் யாவரும் இப்புத்தகத்தைப் படித்துப் பகவானது அரிய நிலையை உணரலானார்கள். இப்பொழுது, லண்டன், ஜர்மனி, பிரான்ஸ் முதலிய பல இடங்களிலிருந்தும் ஐரோப்பியர்கள் பகவான் தரிசனத்திற்கு வந்த மயமாய் இருக்கிறார்கள். அநேகர் திருவண்ணாமலையிலேயே தங்கி, பகவானது விசார மார்க்கத்தை அப்பியாசிக்கிறார்கள். மிஸ்டர் பிரண்டனும் திருவண்ணாமலையிலே வசிக்கிறார். தவிர பரத கண்டமாகிய நமது தேசத்தில் வடக்கே இமயபர்வதத்திலிருந்து தெற்கே குமரிவரையில் இவரது பக்தர்கள் பல துறைகளிலும் உளர். அவர்களை எண்ணக் கணக்கிலடங்கார். சம்சார சாகரத்தில் தவிக்கும் முமுட்சுக்களுக்கு இங்ஙனம் பகவான் ஜாதி, மதம், குலம் முதலிய வித்தியாசமின்றி ஒரு ஞானதீபஸ்தம்பமாய், ஞானகுருவாய் பிரகாசிக்கின்றார்.

## இவரது பெருமை.

“ காமமா திகள்வந் தாலும் கணத்திற்போம் மனத்திற் பற்ருர்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்
பாமர ரெனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சீவன் முக்தர் ”
—(கைவல்யம்)

என்றபடி இவ்விலக்கண முடையவரே ஜீவன்முக்தராவார். அன்ருர், சிலர் கருதுகிறபடி பிறர் கருத்தறிதல் முதலிய சித்திகளைப் பெற்றிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. பிராரப்த மிருப்பின் திருஞான சம்பந்தர் போன்ற ஒரு சில ஞானிகள் அவைகளுடன் கூடியும் நடிப்பார்கள்.

“ சித்தமா யுள்பொருளைத் தேர்ந்திருத்தல் சித்திபிற
சித்தியெலாஞ் சொப்பனமார் சித்திகளே-நித்திரைவிட்
டோர்ந்தா லவைமெய்யோ வுண்மைநிலை நின்றுபொய்ம்மை
தீர்ந்தார் தியங்குவரோ தேர்.” —(உள்ளது நாற்பது)

என்று மஹர்ஷிகள் அருளியிருப்பதையுங் காண்க. ஆயினும் மஹர்ஷிகளிடம் வரும் எண்ணிறந்த பக்தர்கள் அவரிடம் அற்புதமும் தெய்வீகமும் வாய்ந்த பற்பல தரிசனங்கள் காண்பது புதியதொரு விஷயமன்று. இவைகளெல்லாம் அவரவர் மனத்தூய்மைக்கும் பரிபக்குவத்திற்கும் ஏற்றபடி நிகழ்கின்றன. இங்கு கவனிக்கவேண்டிய முக்கியமானதோர் உண்மை யாதெனில், இவ்விதக் காட்சிகள் யாவும் பிறர் திருஷ்டிக்கே யன்றி அப் பெரியோர்களின் திருஷ்டிக்கன்று. ஆனல் இத்தன்மை வாய்ந்த திவ்ய தரிசனங்கள் ஜீவன்முக்தரிடம் மட்டும் விளங்குமேயன்றிப் பிறரிடம் காண்பது துர்லபம். பொறுமை, சாந்தம், மலைவிழுந்தாலும் மனங்கலங்காத

தீரத்தன்மை, சமத்வம், ஸஹஜசமாதிநிலை முதலிய ஞானிகளின் இலக்கணங்கள் சகலமும் இவரிடம் பூரணமாய்க் காணலாம். இவரது சமத்வம் மனிதர்கள்பால் மட்டுமல்ல; மற்றைய நாய், பசு, குரங்கு, காகம், அணில், மயில் முதலிய சகல ஜீவர்களிடத்தும் ஒரே தன்மையா யிருக்கிறது. பகவத் கீதையில் கிருஷ்ணபகவான்,

" அறிவினிற் றன்ஞ லின்புற் றனைத்தவா வினையு நீக்கி
வெறிதரு வெகுளி காம மயக்கநீத் தின்ப துன்பம் [துப்
வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சியென் றிவையுமாய்த்
பொறிதரு புகழுந் தீங்கும் போற்றல்போற் றூமைபோக்கி "

"ஆமைதன் னுறுப்போ ரைந்துந் தன்னுளே யடக்கு மாபோல்
தீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தி
வாய்மையு ணிகழு மின்னே வழுத்தவும் படுகின் றூனல் [லாம்"
தூய்மைசெய் தெவையு நாளுஞ் சொல்லுவ தவன்றன் சொல்

என்றருளி யிருக்கிறுர். இக்குணங்களுக்கு மஹர்ஷிகள் ஒரு சான்ருக விளங்குகின்ருர் என்ற உண்மையை அவரிடம் சில நாட்கள் பழகினல் எவரும் உள்ளங்கை நெல்லிக்கனிபோ லறியலாம்.

இத்தகைய மெய்ஞ்ஞானச் செல்வராகிய பகவான் ஸ்ரீ ரமணரிடம் ஓர் அற்புத வசீகர சக்தி (Spiritual Magnetic Power) விளங்குவதைக் காணலாம். காரணம் யாதெனில் பரிபாக மடைந்த ஞானிகளின் ஆத்ம சக்தி மிக சூக்ஷ்ம கிரணங்களாக அன்னுர் சரீரங்களினின்றும் சதா பிரகாசித்துக்கொண் டிருக்கிறது. இதனையே ஆன்ம ஒளி வட்டம் (Spiritual Aura) என்று சொல்லுவார்கள். ஸஹஜ நிர்விகல்ப சமாதியில் வீற்றிருக்கும் நித்ய போதானந்த சொரூபியாகிய மஹர்ஷிகளின் ஆன்ம

ஒளிவட்டமானது மிக பலமும் சக்தியும் வாய்ந்தது. இவரிடம் வரும் யாவரிடத்தும் இந்த ஞானப் பிரபை (ஒளி) பக்ஷபாத மின்றி வீசுவதாயினும், தத்தம் உள்ளன்பிற்கும் மனத் தூய்மைக்கும் ஏற்றவாறு ஒவ்வொருவரும் கிரகிக்கின்றனர். நாஸ்திக மதத்தைச் சார்ந்தவர்களும் இவர் சந்நிதானத்தில் ஓர்வித சாந்தானுபவத்தைப் பெறுகிறார்களெனின், உள்ளன்புடன் இவரை சேவிக்கும் ஆஸ்திகர்கள் அதிசீக்கிரத்தில் அந்தசுகானுபவ (சமாதி) நிலையை அடைவார்கள் என்றுரைப்பது மிகையாகாது.

## இவரது நூல்கள்

I. பகவான் பலரது வேண்டுகோளுக் கிணங்கி லோகோபகாரமாகப் பல சிறு கிரந்தங்களை அருளியுள்ளார். அவைகள் யாவும் ' சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் ' என்ற அழகுக்கோ ரிலக்காயிருப்பதோடு வேதாந்த பரிபாஷைகளைக் கூடியவரை அகற்றி சாதாரண ஜனங்களும் விஷயங்களை எளிதில் உணர ஏதுவாயிருக்கின்றன. மஹர்ஷிகள் இயற்றிய நூல்களாவன :—

(1) அருணாசல ஸ்துதி பஞ்சகம் :—இது பகவான் நானற்ற அந்நிலை பெற்ற பின், அருணாசலேசர்மீது துதியாகப் பாடிய ஐந்து நூல்களின் தொகுதியாகும். அருணாசல அக்ஷரமணமாலை, அருணாசல நவமணிமாலை, அருணாசல பதிகம், அருணாசல அஷ்டகம், அருணாசல பஞ்சரத்நம் என்பன இத்தொகுதியில் அடங்கியவை.

(2) உபதேச உந்தியார் :—இது பகவான் சமீபத்தில் வசித்துவரும் பக்தர் பாரத்வாஜ முகவைக் கண்ண முருகனார் உலகம் கர்மபாசத்தினின்றும் உய்யும்படியான

முறையை அருளும்படி பகவானை வேண்ட, அதற்குப் பகவானும் இரங்கி 30 பாக்களால் அருளிய உபதேசம். இதில் கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய இந்நான்கு மார்க்கங்களும் முறையே சுருங்கச்சொல்லி மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஸ்வாமிகள், தமிழிலுள்ள மேற்படி உந்தியாரை ஆசிரமத்திற்கு அடிக்கடி போக்குவரத்துள்ள நெல்லூர் திரு. ராம யோகிகளது வேண்டுகோளுக்கிணங்கி முதலில் தெலுங்கிலும் மற்றும் சிலபக்தர்கள் வேண்டுகோளுக் கிணங்கிப் பின்பு சம்ஸ்கிருதத்திலும் மலையாளத்திலும் முறையே செய்தருளினர்.

(3) உள்ளது நாற்பது :—இதுவும் மேற்படி மு. க. முருகனர் வேண்டுகோளுக்கிணங்கி பகவான் பெரிதும் மனமுவந்து ஞானவிசார மார்க்கத்தை யாவரும் தெள்ளிதி லுணரும்பொருட்டு, உள்ளது நாற்பது என்ற பெயருடன் 40 வெண்பாக்களால் அருளின ஒருதிவ்யகிரந்தமாகும். இதனுடன் முப்பது செய்யுட்களால் தொகுக்கப்பெற்ற அனுபந்தம் ஒன்றும் சேர்ந்திருக்கிறது. இதனுள் ஸத் சங்கத்தின் பெருமை, ஹ்ருதய ஸ்தான இருப்பு, ஆத்ம ஞான வியல்பு, முதலியன விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல்களைத் தவிர அப்பளப்பாட்டு, ஆன்மவித்தை என்னும் இரண்டு கீர்த்தனங்கள் வாயிலாகவும் உண்மைத் தத்துவத்தை விளக்கியுள்ளார்.

II. மஹர்ஷிகள் சில மொழிபெயர்ப்பு நூல்களும் ஆக்கியுள்ளார். அவையாவன :—

(1) விவேக சூடாமணி :—ஜகத்குரு சங்கராசாரியர் வடமொழியில் அருளிய விவேக சூடாமணி என்ற அத்

வைத கிரந்தத்தையும், திருக்கு திருசிய விவேகத்தையும், தமிழ்நாட்டவர் யாவரும் அறியும்பொருட்டு பகவான் தமிழில் வசனமாக மொழிபெயர்த்தருளினர். தக்ஷிணமூர்த்தி தோத்திரம், அத்தாமலகம், குரு ஸ்துதி இவைகளும் பகவானல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

(2) தேவிகாலோத்தரம்-ஞானசாரவிசார படலம்:—இதுவும் மஹர்ஷிகள் சம்ஸ்கிருதத்திலுள்ள நூலை ச்லோகத்திற் கொரு வெண்பாவாகத் தமிழில் மொழிபெயர்த்தருளியது.

(3) சர்வஞானேத்தரம் - ஆன்ம சாட்சாத்காரப் பிரகரணம்:—என்ற சம்ஸ்கிருத நூலை பகவான் சமீபத்தில் 62 வெண்பாக்களாக தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இதுவும் விசார மார்க்கத்தைப்பற்றிக் கூறுகிறது.

III. ரமணஸ்வாமிகளிடம் மிக்க அன்புவாய்ந்த சில பக்த சிரோமணிகள் முயற்சியால் அவர் உபதேசங்களடங்கிய பல நூல்கள் வெளிவரலாயின.

(1) நான் யார்:—இது அன்பர் திரு. சிவப்பிரகாசம் பிள்ளை என்பவரால் பகவானிடமிருந்து சம்பாஷணைவாயிலாகக் கிரகிக்கப்பட்டது. விசார மார்க்கத்தைப்பற்றிச் சொல்வது. வக்கீல் திரு. சேஷுவய்யர் என்னும் ரமண பக்தர் இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

(2) ரமணகீதை:—பதினெட்டு அத்தியாயங்களடங்கிய இந்நூல் பகவானின் சிறந்த பக்தரான திரு. காவிய கண்ட கணபதி சாஸ்திரிகளால் வடமொழியில் இயற்றப்பட்டது. தாமும், தெய்வராதன், கார்ஷ்ணி, யோகநாதன், கபாலி, வைதர்ப்பன் முதலிய சிஷ்யர்களும்

பகவானிடமிருந்து சம்பாஷணை வாயிலாகக் கிரகித்த விஷயங்களை, மேற்படி சாஸ்திரிகள் முந்நூறு சுலோகங்களில் தொகுத்தார். வடமொழி அறியாத தமிழர் பலருக்கும் பெரிதும் பயன்படுமாறு பக்தர் திரு. நரசிம்மய்யா என்பவர் இதற்குத் தமிழில் தாற்பரியம் எழுதியுள்ளார். இதில் ஆத்மநிஷ்டை, பக்தி, யோகம், ஞானம், ஞானிகளின் இயல்பு, ஹ்ருதயமும் மனமும், ஹ்ருதயகிரந்தி, மாயை, மனமடக்கும் முறைகள், ஜீவன்முத்தி, முத்த லக்ஷணம் முதலிய பற்பல விஷயங்களும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூலின் இறுதியில் பகவானருளிய அருணாசல பஞ்சரத்நமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) ஸத்தர்சனம் :—மேற்படி பக்தர் திரு. கணபதி முனி, பகவான் அருளிய உள்ளதுநாற்பதை வடமொழியில் மொழிபெயர்த்து 'ஸத்தர்சனம்' என்ற நாமத்துடன் வெளியிட்டார். அதற்கு அன்பர் திரு. கபாலி சாஸ்திரிகள் ஸம்ஸ்கிருதத்திலே பாஷ்யம் எழுதினர். அந்த 'ஸத்தர்சன' பாஷ்யத்தை யவரே ஆங்கிலத்தும், திரு. விச்வநாத ஐயர் என்னும் ரமணபக்தர் தமிழிலும் மொழிபெயர்த்துள்ளார்.

(4) விசாரசங்கிரக வினாவிடை :—பகவான் மௌனமாய் மலையின்கண் வீற்றிருக்குங்கால், அவ்வூரில் வசித்து வந்த திரு. ஜீ. சேஷய்யர் என்பவர் அடிக்கடி வந்து பகவானைத் தரிசித்துச் செல்வது வழக்கம். மேற்படியார் வேண்டுகோளுக்குப் பெரிதும் மனமிரங்கி, அவர் கேட்ட கேள்விகட்கெல்லாம் விரிவான பதில்கள் எழுதித் தந்தருளினர். மகர்ஷிகளிடம் அன்பு வாய்ந்த திரு. நடனானந்தர்

என்னும் பக்தர் இவைகளை யெல்லாம் திரட்டி ஒழுங்காகத் தொகுத்து 'விசாரசங்கிரகவினவிடை' என்ற பெயருடன் வெளியிட்டார். ராஜயோகம், ஞானயோகம், விசாரப் பெருமை, பிரணவத்தியானம் முதலியன இதில் பிரஸ்தாபிக்கப்பட்ட விஷயங்களாகும்.

(5) உபதேசமஞ்சரி :—இதுவும் மேற்படி திரு. நடனானந்தர் அவர்களால் தொகுக்கப்பெற்றது. சமீபகாலத்தில் மேற்படி பக்தர் பகவான் திருவாக்கினின்றும்கிரகித்த விஷயங்களைத் திரட்டி முறையே உபதேசப் பிரகரணம், அப்பியாசப் பிரகரணம், அநுபவப் பிரகரணம், ஆரூடப் பிரகரணம் என நான்கு பிரிவுகளாக வகுத்து 'உபதேச மஞ்சரி' யென்ற நாமத்துடன் வெளியிட்டார்.

(6) ஆங்கில உபதேசசாரம் :—சேலத்தில் பிரபல வக்கிலா யிருந்து தற்காலம் வானப்பிரஸ்தாசிரமத்தை மேற்கொண்டு ஆசிரம சமீபத்திலே வசித்துவரும் ஸ்ரீமான் பி. வி. நரசிம்மய்யர், பகவான் அருளிய உபதேச உந்தியாரை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

(7) ஆங்கில ரமணசரித்திரம் :—மேற்படி திரு. பி. வி. நரசிம்ம ஸ்வாமிகள் பகவானது சரித்திரத்தையும் உபதேசங்களையும் Self-Realisation or The Life & Teachings of Ramana Maharshi என்ற பெயருடன் ஆங்கிலத்தில் ஒரு புஸ்தகமும் விரிவாக எழுதியுள்ளார்.

(8) ஆங்கில உள்ளது நாற்பதும் (Reality) ஆங்கில உபதேசசாரம் விரிவுரையும் :—ரமணதாச வக்கீல் திரு. சேஷய்யர் பகவான் அருளிய உள்ளதுநாற்பதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அதற்கு வியாக்யானமும்

எழுதியுள்ளார். 1931-ம் வருடம் உபதேசசாரத்திற்கு இந்த ரமணதாசர் ஒரு அழகிய விரிவுரை எழுதியிருக்கிறார். இவை பகவானது விசார மார்க்கத்தை எளிதில் விளக்கிக் காட்டுகின்றன.

(9) ஸ்ரீ ரமணவிஜயம்:—சுவாமி சுத்தானந்த பாரதியார் ஓர் தெய்வீக கவியரசர். ரமணபகவானிடம் அன்பு மிக்கவர். பகவான் திவ்யசரிதையையும் அருண்மொழிகளையும் விரிவாய் இனிய செந்தமிழ் நடையில் எழுதியுள்ளார். பகவானைப்பற்றிய விஷயங்கள் யாவற்றையும் விரிவாய் இந்நூலில் காணலாம்.

## முடிவுரை

"சத்திணக் கத்திறைற் சார்பகலும் சார்பகலச்
சித்தத்தின் சார்பு சிதையுமே—சித்தச்சார்
பற்றா ரலைவிலதி லற்றார்ஜீ வன்முத்தி
பெற்றா ரவரிணக்கம் பேண்" (உள்ளது நாற்பது-
அனுபந்தம்).

என்றபடி பெரியோர்களின் பெருமையை ஒவ்வொருவரும் உள்ளபடி உணர்ந்து அன்னாரிணக்கம் பெற்று உய்யவேண்டியது மானிட வாழ்க்கையின் சிறந்த பயனாகும். மேலும்

"ஜீவன்முக் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து ஜன்ம
பாவன மானா ரென்று பலமறை முழங்கும்..." என்ற

கைவல்யவாக்கிய ரீதியாய் ஜீவன்முக்தரான ஸ்ரீ ரமண மஹர்ஷிகளைத் தரிசித்து அன்னார் காட்டிய நெறிநின்று ஸாயுஜ்யபதவி யடைய எல்லாம்வல்ல இறைவன் நமக்கு அருள்புரிவாராக.

ரமணசரித்திரச்சுருக்கம் முற்றிற்று.

ஓம்

பகவான்

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகளின்

## உபதேச மொழிகள்

ஓம்.

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகளின் உபதேச மொழிகள்.



## I. ஆத்மா.

*1. ஹ்ருதயமென்னுங் குகையின் மத்தியில் (அதாவது மனாகாசத்தில்) கேவல ப்ரஹ்மமே 'நான் நான்' என்று ப்ரத்யக்ஷமாய் ஆத்மரூபமாகப் பிரகாசிக்கின்றது. ஆத்மாவைக் குறித்துத் தேடுகிற அல்லது முழுகின மனத்தினால் அல்லது பிராணவிருத்தியை அடக்குவதினால் ஹ்ருதயத்துட் புகுந்து ஆத்மாவில் நிலைபெற்றவனாகவேண்டும். இம்மூன்று மார்க்கங்களும் ஆத்மாவைக் காண்பதற்கு உபாயங்களாம்.

2. ப்ரஹ்மம் எல்லா ஜீவர்களுடைய ஹ்ருதயங்களிலும் ஆத்மசொரூபமாக நிவஸிக்கிற (பிரகாசிக்கிற) தென்பதற்கு சர்வஜனங்களும் 'நான் நான்' என்று மார்பைத் தொட்டுக்காட்டுவதே போதுமான சாக்ஷி. இக்காரணத்தினாலேயே ப்ரஹ்மத்திற்கு ஹ்ருதய மென்றதோர் பெயருமுண்டு.

3. ஆத்மா ஜாக்ரம், சொப்பனம், சுஷுப்திகளில் நேத்திரம், கண்டம், ஹ்ருதயமென்னும் ஸ்தான முன்னிலை

---

* இச்சுலோகம் தன்னுள் சகல வேதாந்தக்கருத்துகளையும் அடக்கிக்கொண்டு இருக்கிறது. ஆதலின் இதை "ஸ்ரீரமணவருள்" என அழைத்திடுதல் தகும். இதன் பெருமையை "ஸ்ரீரமணவருள்" என்ற சிறு புத்தகத்திற்காண்க.

யாக போகங்களை புஜிக்கினும் அது தன்னுடைய முக்கிய ஸ்தானமாகிய ஹ்ருதயத்தை விட்டு எப்பொழுதும் நீங்குகிறதில்லை.

4. ஒவ்வொரு தேகத்திலும் விளங்குவதால் இவ்வாத்மாவையே சாக்ஷியென்றும் துரியமென்றும் சொல்வார்கள். இந்த நானென்னும் ஜோதியின் அந்தர்க்கதமாய் சர்வதேகங்களிலும் நானற்று விளங்கும் பரப்ரஹ்மமாகிய ஆத்மாகாசமே (ஞானகாசமே) எதார்த்த வஸ்து. இதுவே துரியாதீதம்.

5. ஏகமாயும் அகண்டமாயும் விளங்கும் ஆத்மஜோதியின்கண் அவஸ்தாத்ரயம், தேகத்ரயமாதிய கற்பனைகள் தோன்றினும் ஆத்மாமாத்திரம் எப்பொழுதும் அசலமாகவே யுள்ளது. எப்படியெனில்:—



| திருஷ்டாந்தம். | தாஷ்டாந்தம். |
|---|---|
| (1) தீபம். | ஆத்மா. |
| (2) கபாடம். | நித்திரை. |
| (3) வாயிற்படி. | மஹாதத்வம். |
| (4) உட்சுவர். | அவித்தை அல்லது காரணசரீரம். |
| (5) கண்ணடி. | அகங்காரம். |
| (6) ஜன்னல்கள். | ஞானேந்திரிய பஞ்சகம். |
| (7) உள்மனை. | காரணதேகம் விளங்கும் சுஷுப்தி. |
| (8) நடுமனை. | சூக்ஷ்மதேகம் விளங்கும் சொப்பனம். |
| (9) முற்றம். | ஸ்தூலதேகம் விளங்கும் ஜாக்ரம். |

ஆத்ம(1) தீபம் சுஷுப்தியில் அவித்தை (4) உட்சுவரும் நித்திரைக் கதவுங் கூடின காரணதேக (7) வுள்மனையில் தானே விளங்க, காலகருமாதி பிராணனுல் உறக்கக் (2) கதவைத் திறக்கவும் மஹாதத்வ (3) வாயிற்படிக்கடுத்த அகங்காரக் (5) கண்ணடி ஆத்மப் (1) பிரதிபலனப் பிரகாசத்துடன் சொப்பன (8) நடுமனையையும் பஞ்சேந்திரியப் (6) பலகணிவழி ஜாக்ர (9) முற்றத்தையும் விளக்கி, காலகருமாதி வாயுவால் நித்ராகபாடம் மூடவே நனவு கனவுகளோடு நானற்றுத் தான் (ஆத்மா) மாத்திரம் என்றும் விளங்குவதால் ஆத்மாவின் அசலமான இருப்பும் அகங்காரத்திற்கும் அதற்குமுள்ள பேதமும் அவஸ்தாத்ரய தேகத்ரய மாதியன தோன்றுவதும் இத்திருஷ்டாந்தத்தால் நன்கு விளங்கும்.

6. ஆத்மா இருட்டும் பிரகாசமுமல்லாத சுயம்ஜோதியாய் தன்மயமாய் தனக்குத்தானே பிரகாசித்துக்கொண்டிருக்கும் வஸ்துவாகலான் அதை இப்படியென்றும் அப்படி யென்றும் பாவித்தல் கூடாது. பாவிக்கும்

நினைப்பே பந்தமாய் முடியும். மனதை ஆத்மாகாரமாக்குவதே ஆத்ம பாவத்தின் தாற்பரியமாம்.

7. ஆத்மா அசுத்தமனதிற்கு அகோசரமாயும் சுத்த மனதிற்குக் கோசரமாயுமுள்ளது.

8. எதார்த்தமாயுள்ளது ஆத்மசொரூப மொன்றே. ஜக ஜீவ ஈச்வரர்கள் 'சிப்பியில் வெள்ளி'போ லதிற் கற்பனைகள். இவை மூன்றும் ஏககாலத்திற் றோன்றி ஏக காலத்தில் மறைகின்றன.

9. சாமான்யஞான வடிவ ஆத்ம சைதன்யத்திற்கும் விசேஷஞான வடிவ * திரிபுடிக்கும் உள்ள சம்பந்தம் பயாஸ்கோப் (Cinema) என்னும் விநோதக் காட்சியின் நிகழ்வினை ஒருவாறு ஒக்கும். எங்ஙனமெனின்;

| திருஷ்டாந்தத்தில்— | தாஷ்டாந்தத்தில்— |
| --- | --- |
| உள்ளிருக்கும தீபத்திற்கும், | ஆத்மாவிற்கும்; |
| தீபத்தை சமீபித்திருக்கும் பூதக்கண்ணாடிக்கும், | ஆத்மாவை சமீபித்திருக்கும் (சத்துவகுண) மனதிற்கும்; |
| சித்திரத்திரள்களின் கோவையே வடிவான நாடாவிற்கும்- | அதிசூக்ஷ்ம நினைவுகளின் கோவையே வடிவான வாசனைத் தொகுதிக்கும்; |
| கண்ணாடி, அதில் தோன்றும் பிரகாசம், தீபம் ஆகிய இம்மூன்றம்சங்களுஞ் சேர்ந்த கண்ணாடிப் பிரகாசத்திற்கும், | மனம், அதில் தோன்றும் பிரகாசம், ஆத்மா ஆகிய இம்மூன்றம்சங்களுஞ் சேர்ந்த காண்பா (ஜீவ)னுக்கும்; |
| கண்ணாடியினின்றும் வெளிப்பட்டுத் திரையில் தோன்றும் தீபப்பிரகாசத்திற்கும், | மனதினின்றும் வெளிப்பட்டு இந்திரிய வாயிலாக ப்ரபஞ்சத்திற்றோன்று மாத்மப்பிரகாசத்திற்கும்; |

* திரிபுடி=அறிவான், அறிவு, அறிபடுபொருள்.

| | |
|---|---|
| திரை வெளிச்சத்தில் தோன்றும் நாநாவித விசித்திர ரூபங்கட்கும் | ப்ரபஞ்ச வெளிச்சத்தில் தோற்றும் நாநாவித நாமரூப திருசிய பதார்த்தங்கட்கும் ; |
| நாடாவை யிழுக்கும் யந்திரத்திற்கும், | வாசனைகளைத் தோற்றுவிக்கும் ஈச்வர நியதிக்கும் ; |

சமானங்கொள்ளப்படும். கண்ணாடி வழியாய், சித்திரக் கோவைகளின் வடிவான நாடா விளங்கும்வரை திரையிலுந் தோற்றங்கள் விளங்குவது போன்று, அந்தக் கரணத்தில் வாசனையுள்ளவரை ஜாக்ரசொப்பனங்களிற் சீவனுக்குத் திருசியப்பிரபஞ்சங்கள் தோன்றிக்கொண்டே யிருக்கும். கண்ணாடி நாடாவிலுள்ள தினையத்தனையுருவைப் பனையத்தனையாகவும், ஒருகணத்திற் பலவடிவங்களையுந் தோற்றுவித்தல் போன்று, மனமும், அங்குரம்போன்ற வாசனைகளை விருக்ஷம்போன்றும், ஒருகணத்திற் பல நாமரூபங்களையும் தோற்றுவிக்கிறது. நாடாவின் அபாவ காலத்தில் தீபப்பிரகாசமாத்திரமே விளங்கிக்கொண்டிருத்தல் போன்று, விருத்தி ரூபமாகிய வாசனையின் அபாவ காலமான சுஷுப்தி, மூர்ச்சை, சமாதியாதிகளில் திரிபுடியின்றி ஆத்மப் பிரகாச மாத்திரமே விளங்கிக்கொண்டிருக்கும். தீபம் கண்ணாடியாதிகளைப் பிரகாசிப்பித்துத் தான் மாத்திரம் நிர்விகாரியா யிருத்தல்போன்று, ஆத்மாவும் சிதாபாசனாதியவற்றைப் பிரகாசிப்பித்துத் தான் மாத்திரம் நிர்விகாரியாகவே யிருந்தபடி யிருக்கிறது.

10. பெருந்தன்மையை இச்சிக்கிறவன் எல்லாப் பலன்களுக்கும் கர்மங்களுக்கு மிடமான தன்னாத்ம ரூபத்தை யவசியம் அறிய வேண்டும். அப்படி விருப்பமுள்ளவனுக்கு உபாசனையின்றிக் கேவல சாஸ்திர விசாரணையினால் சித்தி யுண்டாகாது.

## II. அதிகாரி

11. ப்ரஹ்மசாரியும், கிருஹஸ்தனும், வானப்ரஸ்தன் அல்லது யதியும், ஸ்திரீயும், சூத்திரனும், பரிபாகமடைந்த எவனாயினும் ப்ரஹ்மஸ்வரூபத்தை விசாரிக்கலாம்.

12. உபாசனை முதலியவைகளாலாவது, அல்லது பூர்வஜன்ம ஸத்கர்மத்தினாலாவது பரிசுத்தமான எவனுடைய மனம் சரீராதி இந்திரிய விஷயங்களில் தோஷங்களைத் தெரிந்து கொள்ளுமோ, எவனுக்கு விஷயங்களில் அருசியும் தேகத்தில் அசாசுவதம் என்கிற புத்தியும் உண்டாகிறதோ அவனை அதிகாரியென்று சொல்லுகிறார்கள்.

13. தேகம் ஸ்திரமல்ல என்கிற புத்தி, விஷயங்களில் வைராக்கியம், என்னும் இவ்விரண்டு குறிகளால் தன்னை ஆத்ம விசாரத்திற்கு அருகன் (தகுதியானவன்) என்று அறியலாம்.

14. பரிபக்குவ மடையாத மனத்திற்கு விசாரசிரவணத்தால் உடனே அபரோக்ஷஞானமும் உப்சாந்தமும் வாய்ப்பது துர்லபம்; என்றாலும் சிறிதுகாலம் மனவொடுக்கத்திற்குரிய பிராணவொடுக்கம், தியானயோகம் முதலிய சாதனங்களிற் பழகிவந்தால் காலக்கிரமத்தில் சித்தோபசாந்தம் சித்திக்கும்.

---

## III. ஆத்மநிஷ்டையும் சாதனவிசாரமும்.

15. பந்தங்கள் எல்லாவற்றையும் போக்கடிக்கக் கூடியது ஆத்மநிஷ்டை ஒன்றே. ஸத்தியத்தையும் அஸத்தியத்தையும் விசாரணையினால் வேறுபடுத்தி அறிந்துகொள்வதை வைராக்கியத்திற்கு சாதன மென்பார்கள்.

16. விருத்தியினால் ஆத்மா (ப்ரஹ்மம்) வியாபிக்கப் படாது. ஆனால் விருத்தி (வியாபாரம்) தன்னுடைய ஆத்மாவான ப்ரஹ்மத்தை யறிய முயற்சி செய்யுமேயாகில் அப்பொழுது அந்த ஆத்மாவை விட்டுத் தனியாக இராது. அதனுடன் ஐக்கிய மடையும்.

17. முயற்சி செய்து எல்லா வியாபாரங்களையும் (விருத்திகளையும்) விஷயங்களாகிய போகங்களிலிருந்து திருப்பி (நீக்கி) அசையாததும் விஷய மில்லாததுமாகிய கேவல விசாரணையிலேயே நிலைபெற்றதாகச் செய்யவேண்டும். தன்னுடைய ஆத்மரூபத்தை யறிய இதுவே சுருக்கமான சாதனம். அந்த முயற்சியினாலேயே மிகவும் மேன்மையான ப்ரத்யக்த்ருஷ்டி சித்திக்கிறது. (அதாவது தன் ஆத்ம பிம்பத்தை ஆத்மாவாகிய தான் பார்க்கிற துண்டாகிறது).

18. எதை எல்லா விருத்திகளுடைய சேர்க்கை யென்று சொல்வார்களோ அந்த 'நான்' என்கிற விருத்தி பிறந்த இடத்தை (நானாரென்கிற விசாரணையினால்) விசாரிக்கவேண்டும். இப்படி விசாரிக்கிறதே ஆத்மவிசாரம். சாஸ்திரவிசாரணை மாத்திரம் ஆத்மவிசாரமாகாது. அஹம் விருத்தியின் ஜன்மஸ்தான (அதாவது மூலஸ்தான) த்தைத்

தேடிக் காண்போமாகில் அகங்கார மடங்கும். ஆத்மா போல் பிரகாசிக்கும் அகங்காரம் எப்பொழுது ஆத்மாவி லடங்குமோ அப்பொழுது ஸத்யஸ்வரூபமான ஆத்மா ஒன்றே எங்கும் நிறைந்ததாய் மிகுந்திருக்கும். இவ்வித ஆத்ம விசாரத்தினுல் உண்டாகும் பலன் எவ்விதமான கஷ்டங்களும் தன்னை ஒட்டாமலிருப்பதேயாம். இதைப் பார்க்கிலும் விசேஷமான பலனில்லை. பலன்களின் எல்லை (முடிவு) இதுதான்.

19. நானுரென்கிற ஆத்ம விசாரணையே மோக்ஷத் தைக் கொடுக்கும். இதுவே சர்வதுக்க நிவிருத்திக்கும் பரமாநந்த ப்ராப்திக்கும் முக்கிய ஹேது.

20. நானுர்? ஸப்த தாதுக்களாலாகிய ஸ்தூல தேகம் நானன்று. சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ கந்தமென்னும் பஞ்சவிஷயங்களையும் தனித்தனியே அறிகின்ற சுரோத் திரம், துவக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வை, கிராணமென்கிற ஞானேந்திரியங்களைந்தும் நானன்று. வசனம், கமனம், தானம், மல விஸர்ஜ்ஜனம், ஆனந்தித்தல் என்னும் ஐந்து தொழில்களையும் செய்கின்ற வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கன்மேந்திரியங்களைந்தும் நானன்று. சுவாஸாதி ஐந்தொழில்களையும் செய்கின்ற பிராணுதி பஞ்சவாயுக்களும் நானன்று. நினைக்கின்ற மனமும் நானன்று. சர்வவிஷயங்களும் சர்வ தொழில்களுமற்று, விஷய வாசனைகளுடன் மாத்திரம் பொருந்தியிருக்கும் அஞ்ஞானமும் நானன்று. மேற்சொல்லிய யாவும் நானல்ல, நானல்ல என்று நேதிசெய்து தனித்து நிற்கும் அறிவே நான். அறிவின் சொரூபம் சச்சிதானந்தம்.

21. மனதில் தோன்றும் நினைவுக ளெல்லாவற்றிற்கும் நானென்னும் நினைவே முதல் நினைவு. இது எழுந்த பிறகே ஏனைய நினைவுகள் எழுகின்றன. தன்மை தோன்றிய பிறகே முன்னிலை படர்க்கைகள் தோன்றுகின்றன; தன்மையின்றி முன்னிலை படர்க்கைக ளிரா. இந்த நானுரென்னும் நினைவு மற்ற நினைவுகளை யெல்லா மழித்துப் பிணஞ்சுடு தடிபோல் முடிவில் தானு மழியும். (அப்பொழுது சொரூப தரிசனம் உண்டாகும்)

22. * [நானுரேன்று விசாரிப்பது எங்ஙனமேனின்] பிறவெண்ணங்க ளெழுந்தா லவற்றைப் பூர்த்திபண்ணுவதற்கு எத்தனியாமல் அவை யாருக்குண்டாயின? என்று விசாரிக்கவேண்டும். எத்தனை எண்ணங்களெழினுமென்ன? ஜாக்கிரதையாய் ஒவ்வோரெண்ணமும் கிளம்பும்போதே இது யாருக்குண்டாயிற்று? என்று விசாரித்தால் எனக்கென்று தோன்றும். உடனே நானுர் என்று விசாரித்தால் மனம் தன் பிறப்பிடத்திற்கு (ஹ்ருதயத்திற்கு)த் திரும்பிவிடும்; எழுந்தவெண்ணமு மடங்கிவிடும். அதாவது, வாக்கினுல் நானென்று சொல்லாமல் இப்பொழுது நானென்று எழுவதெது? என்று கூர்மையாய் விசாரித்தால், அப்பொழுது ஹ்ருதயத்தில் ‘நான் நான்’ என்னும் சப்தமில்லாமல் ஓர்வித ஸ்புரிப்பு அதாவது கண்டமாகவும், நாநாவாகவுமிருந்த நினைவுகள்போய் அகண்டமாகவும் ஏகமாகவுமுள்ள ஞெப்தி மாத்திரம் தனக்குத்தானே தோன்றிக்கொண்டிருக்கும்.

---

* 22-24 இவரது விசார மார்க்கத்தைக் கூறுகின்றன; இதன் சிறப்பை முடிவுரையிற் காண்க.

23. 'நான் நான்' என்று பிரகாசிக்கும் ஸ்புரிப் பிற்கே 'அஹம் ஸ்புரிப்பு' என்றும், 'ஆன்ம விஞ்ஞான' மென்றும் பெயர். இது வஸ்து (ஆத்மா)வை விட்டுத் தனியாயிராது. இந்த ஸ்புரிப்பே வஸ்துவை அபரோக்ஷப் படுத்தற்கான தக்க குறியாம்; என்றாலும் இதுவே வஸ்து நிலையாகாது. இந்த ஸ்புரிப்பானது எதனை ஆச்ரயித்து விளங்குகிறதோ அந்த மூலமே வஸ்து அல்லது *ப்ரஜ்ஞானமெனப்படும்.

24. 'அஹம் ஸ்புரிப்'பை விடாமல் சும்மா இருந்தால் தேகம் நானென்னும் அகங்காரரூப ஜீவபோதத்தை முற்றிலும் நாசப்படுத்தி கர்ப்பூரத்திற் பற்றின நெருப்புப் போல் முடிவில் தானும் சாந்தமாய்விடும். நானென்னும் நினைவு கிஞ்சித்துமில்லாத இந்நிலையே மோக்ஷமென்றும், சொரூப மென்றும், மௌனமென்றும் [பலவிதமாகச்] சொல்லப்படுகிறது. இவ்வாறு சும்மாவிருப்பதற்குத்தான் 'ஞான திருஷ்டி' என்று பெயர். சும்மாவிருப்பதாவது, மனதை ஆத்ம சொரூபத்தில் லயிக்கச் செய்வதே. அன்றி பிறர்கருத்தறிதல், முக்காலமுணர்தல், தூரதேசத்தில் நடப்பனவறிதல் ஆகிய இவை ஞான திருஷ்டியாகமாட்டா.

25. மனமடங்குவதற்கு விசாரணையைத்தவிர வேறு தகுந்த உபாயங்களில்லை. மற்ற உபாயங்களினாலடக்கினால் மனமடங்கினாற்போலிருந்து மறுபடியும் கிளம்பிவிடும்.

26. நானாரென்கிற விசாரம் †முத்தேகங்களிலுமுள்ள ஆத்மபாவத்தைப் போக்கடிக்க சாதனமாகின்றது.

---

*வேதாந்தம் 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மம்' என்றது இதுபற்றியேயாம்.

† முத்தேகம்-ஸ்தூலதேகம், சூக்ஷ்மதேகம், காரணதேகம்.

எப்படி யென்றால், ஸ்தூலதேகத்தைப் பற்றியே மற்ற தேகங்கள் ஜீவித்திருப்பதாலும், தேகம் நானென்பதில் *பஞ்சகோச ரூபமான முத்தேகங்களுமே அடங்கிவிட்டதாலும், ஸ்தூலதேகத்திலுள்ள ஆத்மபாவத்தின் அழிவே மற்ற தேகங்களிலுள்ள ஆத்மபாவத்தின் அழிவாகும்.

27. தொன்றுதொட்டு வருகின்ற விஷய வாசனைகள் அளவற்றனவாய்க் கடலலைகள்போற் றோன்றினும் அவையாவும் சொரூபத்யானம் கிளம்பக் கிளம்ப அழிந்துவிடும். அத்தனை வாசனைகளு மொடுங்கி, சொரூப மாத்திரமாயிருக்க முடியுமா வென்னும் சந்தேக நினைவுக்கு மிடங்கொடாமல், சொரூபத்யானத்தை விடாப்பிடியாய்ப் பிடிக்கவேண்டும். ஒருவன் எவ்வளவு பாபியாயிருந்தாலும், 'நான் பாபியா யிருக்கிறேனே! எப்படி கடைத்தேறப்போகிறே' னென்றேங்கி யழுதுகொண் டிராமல், தான் பாபி என்னுமெண்ணத்தையு மறவே யொழித்து சொரூபத்யானத்தி லூக்கமுள்ளவனாகி விருந்தால் அவன் நிச்சயமா யுருப்படுவான்.

28. மனதின்கண் எதுவரையில் விஷய வாசனைகளிருக்கின்றனவோ, அதுவரையில் நானாரென்னும் விசாரணையும் வேண்டும். நினைவுகள் தோன்றத் தோன்ற அப்போதைக்கப்போதே அவைகளையெல்லாம் உற்பத்திஸ்தானத்திலேயே விசாரணையால் நசிப்பிக்கவேண்டும். கோட்டைக்குள் எதிரிகளுள்ளவரையில் அதிலிருந்து வெளியே வந்துகொண்டேயிருப்பார்கள். வர வர அவர்களையெல்

---

* பஞ்சகோசம்-அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமயமெனும் கோசங்கள் ஐந்தாம்.

லாம் வெட்டிக்கொண்டே யிருந்தால் கோட்டை கைவசப் படும்.

29. நானுரென்ற விசாரணையினுல் மனதை வெளி விடாமல் ஹ்ருதயத்தில் வைத்துக்கொண்டிருப்பதற்குத் தான் 'அகமுகம்' அல்லது 'அந்தர்முகம்' என்று பெயர். ஹ்ருதயத்திலிருந்து வெளிவிடுவதற்குத்தான் 'பஹிர்முக' மென்று பெயர்.

30. ஆத்ம விசாரமே பெரும் புண்ணியம். அது தான் பாவனமான (புண்ணியமான) காரியங்களிலெல் லாம் மிகவும் பாவனமானது. மற்ற உபாயங்களினுல் சாதிக்கக்கூடிய சித்திகளெல்லாவற்றையும் அடைந்தாலும், ஆத்ம விசாரத்தினுலேயே அந்தியத்தில் ஒருவன் முக்தி அடைகின்ருன்.

31. ஹ்ருதயத்திலிருக்கும் ஈசன் திருவருளாலே யன்றி மனம் அகமுகம் திரும்பி நானு ரென்று விசாரிப் பது துர்லபம். அதாவது தன் முயற்சியோடு இறைவன் திருவருளும் இருந்தால் தான் ஆத்ம விசாரம் பலனைத் தருமென்பது சித்தாந்தம்.

———

# IV. ஞானம்

32. 'நான் ப்ரஹ்மமாகிறேன்' என்ற விருத்தி ஞான மல்ல. 'ப்ரஹ்மம் நான்' என்கிற அறிவும் ஞானமல்ல. 'நானே எல்லாம்' என்கிறதும் ஞானமல்ல. 'இந்த பிர பஞ்சமெல்லாம் ப்ரஹ்மம்' என்கிறதும் ஞானமல்ல. இந்த நான்கு விருத்திகளும் (வியாபாரங்களும்) எண்ணங் களே யாகும். வித்வான்கள் பரிசுத்தமான ஆத்மரூபத் தில் நிலைபெற்றிருக்கிறதை ஞான மென்கிறார்கள்.

33. சர்வ அறிவிற்கும் சர்வ தொழிலுக்குங் காரண மாகிய மன மடங்கினால் ஜகத்திருஷ்டி நீங்கும். கற்பித ஸர்ப்பஞானம் போனாலொழிய அதிஷ்டான ரஜ்ஜு ஞானம் உண்டாகாதது போல, கற்பிதமான ஜகத்திருஷ்டி நீங்கினாலொழிய அதிஷ்டான சொரூப தரிசன (ஞான) முண்டாகாது.

34. அப்பியாச காலத்தில் ஸஹஜமான நிலையை உபாசனை யென்கிறார்கள். அந்த நிலை எப்பொழுது திட மான ஸ்திதியை அடையுமோ அப்பொழுது தான் அது ஞானமென்று சொல்லப்படுகிறது. அதாவது, உட்புகுந்த புத்தி மறுபடியும் வெளியில் வருகிறதானால் அதை அப்பி யாசமாகவே சொல்லுவார்கள். நழுவாத அனுபவமே ஞானமென்று சொல்லப்படும்.

35. ஞானம் அல்லது வேதாந்த மார்க்கத்தின் முடிவு யாதெனில் 'நான்' என்ற கர்த்தத்துவஞானம் (அகங்காரம்) முற்று மடங்கிய சின்மாத்திர நிலையி லிரண் டற்று விளங்குதலாம்.

36. பிரதிதினமும் படிப்படியாக ஞானம் சிறிது சிறிதாகக் கிடைக்காது. அது அப்பியாசத்தின் பரிபாகத்தினால் பூரணமாகி ஏககாலத்தில் பிரகாசிக்கின்றது.

37. அஞ்ஞானத்தை அடக்கினதாகி ஒரு காலத்திலுண்டான ஞானம் மறுபடியும் விலகாது.

38. முத்திபேதங்களைப் போலவே சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஞானத்தின் தாரதம்யங் (பூமி)கள் பரபுத்திக்கு (அதாவது பிறர் புத்திக்கு) மாத்திரம் காணப்படும். உண்மையில் ஞானிகளுடைய ஞானமொன்றேயாகும். பிராரப்தத்தை ஒட்டினதாகிய தேகம் இந்திரியம் முதலியவற்றின் நடவடிக்கையைப் பார்த்து, மற்றவர்கள் ஞானத்தில் பூமி பேதங்களைக் கற்பித்தார்கள். உண்மையாக ஞானத்திற்கு ஏற்றமும் குறைவும் கிடையாது.

39. அன்னியத்தை நாடாதிருத்தல் வைராக்கியம் அல்லது நிராசை ; தன்னை விடாதிருத்தல் ஞானம். உண்மையிலிரண்டு மொன்றே.

40. சுஷுப்தி, மூர்ச்சையாதிய காலங்களில் எவ்வித ஞானமும் அதாவது தன் ஞானமோ அன்னிய ஞானமோ அற்பமும் இன்றென்பது எவர்க்கும் அனுபவம். பின்னர் தூக்கத்தினின்றும் 'விழித்தேன்' மயக்கத்தினின்றுந் 'தெளிந்தேன்' என்ற அனுபவம் முற்கூறிய நிர்விசேஷ நிலையினின்றுதித்ததோர் விசேஷ ஞானத்தினது தோற்றம். இவ்விசேஷ ஞானமே விஞ்ஞான மெனப்படுகிறது.

41. விஞ்ஞானமானது ஆத்மாவை யேனும் அனாத்மாவையேனும் ஆச்ரயித்து விளங்குமே யல்லாது தனியா

கப் பிரகாசிக்காது. இது ஆத்மாவை ஆச்ரயித்து ஆத்மாகாரமாக விளங்கும் ஸ்திதியே 'அஹம் ஸ்புரிப்பு'என்றும் 'ஆன்ம விஞ்ஞான' மென்றும், 'அகண்டாகார ஞான' மென்றும், அனாத்மாவை ஆச்ரயிக்கும்போது அஞ்ஞான மென்றும் சொல்லப்படுகிறது.

42. அலையற்ற கடலெனவும், அசைவற்ற ஆகாய மெனவும் சகலவிருத்திகளும் அடங்கியுள்ள நிலையெதுவோ, சாதகனுக்கு விளங்கக்கூடிய சிந் (ஞப்தி) மாத்திர அந்நிலையே விஞ்ஞானத்தின் இயல்பாம்.

---

## V. ஞானி.

43. * வாசனையற்ற (முனிபாவமாகிய) மௌனத்தினால், ஞானி சந்தேகமில்லாமல் தன்னை ஞானியென்று நிச்சயித்துக்கொள்ளக்கூடும்.

44. ஞானி ஆத்மாவிலேயே கம்பீரனாய் எப்பொழுதும் நிலைபெற்றிருக்கின்றான். பிரபஞ்சத்தைப் பொய்யென்றும் நினையான். பிரபஞ்சம் தன்னைப் பார்க்கிலும் வேறென்றும் நினையான்.

45. ஆத்மாவில் நிலைபெற்றவ (ஞானியி) னுடைய ஸஹஸ்ராரம் (மூளை) சுத்தமான ஜோதி ஸ்வரூபமாகும். ஸாந்நித்ய பலத்தினால் அதில் விழுந்த சங்கல்பங்கள் (கோரிக்கைகள்) ஜீவிக்கா.

46. ஆத்மாவில் ஸஹஜமான நிலையே துர்லபமான தவம். தன்னை அநேகர் சூழ்ந்திருந்தாலும் ஸஹஜமான நிலைபெற்றவன் இயற்கையாய் பிரதிதினமும் அசாத்தியமான தவம்செய்கிறான். அந்த இடைவிடாத் தவத்தினால் பிரதிக்ஷணமும் பரிபாகத்தை அடைகிறான். அவனுக்குத் தனியாக இருக்கவேண்டுமென்ற ஆவசியக மில்லை.

47. ஞானிகள் மற்ற ஜனங்களுக்கு உபதேசிக்கும் பொருட்டும், அவர்கள் நன்மை யடையும்பொருட்டும், பரிபாக மடைந்தவர்களாய்க் கர்மங்களைச் செய்கின்றார்களே தவிர விதி சாஸ்திர பயத்தினால் செய்கிறவர்களல்ல.

---

* வாசனையற்ற முனிபாவம் அல்லது மௌனம் = சங்கல்ப விகல்ப மற்ற மனோசாந்தி.

48. *ஞான பூமிகள் ஏழனுள்ளும் நான்காம் பூமியி லுள்ளவனே ஞானி யெனப்படுகிறான்.

49. நான்கு முதல் ஏழு பூமிகள் வரையுமுள்ள இலக் கணங்கள் ஜீவன்முத்தியி லுள்ள அனுபவ பேதங்களைப் பற்றியனவே யொழிய, ஞான நிலையைப் பற்றியனவோ மோக்ஷ நிலையைப் பற்றியனவோ அல்ல. ஞான, மோக்ஷ நிலைகள் சம்பந்தப்பட்டவரை அந்நான்கினு மற்பமும் பேதமில்லை.

50. (ப்ரஹ்ம)வரிஷ்டனுடைய நிரந்தர சுகாநுபவம் சம்பந்தப்பட்டவரை அதற்குக் காரணமான பூர்வ புண் ணியவிசேஷம் பற்றி சுருதிகள் வரிஷ்ட பதத்திலுள்ளவனை சிறப்பிக்கின்றனவே யல்லாது வேறு காரணத்தாலல்ல.

51. வரிஷ்ட பதம் கோரிக்கையாலும், முயற்சியா லும் அடையப்படுவதன்று. அதற்குக் காரணம் பிராரப்த மேயாகும். வரிஷ்டனை விசேஷித்துக்கூறும் சுருதிகள் மற்ற மூவரையும் ஞானிகளல்ல வென்று கூறவில்லையே. நான்காம் பூமியிலேயே அகங்காரம் முற்றும் நாசமடைவ தால் அதற்கு மேல் ஒன்றை விரும்பவும், முயலவும், அடையவுங் கர்த்தாவாயுள்ளவர் யார் ?

52. எவனுக்கு ஸ்வரூபத்தைப் பார்க்கிலும் விஷயி யாகிய அஹம்விருத்தி (நான் என்னும் வியாபாரம்) பிரத் தியேகமாக அனுபவிக்கப்படாதோ அந்த ஞானிக்கு வியாபார விஷயங்கள்கூட ஸ்வரூபத்தைப் பார்க்கிலும் பின்னமாக (வேறாக)ப் பிரகாசிக்காது.

---

* சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம் சத்தி, பதார்த்தாபாவனை, துரிய மென ஞானபூமிகள் ஏழாம்.

53. அபிமானமுள்ள எவனுக்கு ஸ்வரூபத்தைப் பார்க்கிலும் விஷயியாகிய அஹம்விருத்தி பின்னமாக இருக்குமோ அவனுக்கு வியாபார விஷயங்கள் ஸ்வரூபத்தைப் பார்க்கிலும் பேத மடைந்ததாகத் தோன்றுகின்றன.

54. பேதமுள்ளதாகத் தோன்றினும் அவ்விடத்தில் ஞானி தத்துவ சம்பந்தமான அபேதத்தையேகொள்ளுகிறான். பேதமாகப் பிரகாசிக்கும் மாயையின் அதீனனாகி (உட்பட்டவனாகி)ய பாமரன் பேதத்தை அடைகின்றான்.

55. ஸ்திரீகளாயினும் பரிபாக மடைந்தவர்களாய் ஆத்மரூபத்தில் நிலைபெற்றவர்களுக்கு நிஷேத மில்லாததினால் ஹம்ஸினிகளாக இருக்கிறது தப்பன்று.

56. முத்தியும் ஞானமும் ஸ்திரீ புருஷர்களுக்கு சமானமானதால் ஸ்திரீயாயினும் ஜீவன்முத்தி யடைந்தால் தஹனஞ் செய்யலாகாது. (ஏனெனில்) அத்தேகமும் தேவாலயமாகவே யிருக்கிறது.

57. முத்தனான புருஷனுடைய தேகத்தை தஹனஞ்செய்வதினால் எத்தனை தோஷங்களிருக்கின்றனவோ, முத்தியடைந்த ஸ்திரீயின் தேகத்தை தஹனஞ் செய்தாலும் அத்தனை தோஷங்க ளிருக்கின்றன.

58. எல்லா பூதங்களிலும் (ஜீவராசிகளிலும்) பக்ஷபாத மில்லாமல் நடக்கிறதென்கிற அடையாளத்தினால் ஒருவனுக்கு ஞானமிருக்கிற தென்று ஊஹிக்க வேண்டும்.

---

## VI. ஞானியும் ஸித்திகளும்.

59. நித்யாத்ம திருஷ்டியுள்ள ஞானிக்கு தவத்தின் பரிபாகத்தினுல் பக்குவமான காலத்தில் ஸித்திகளுண்டாகும். பிராரப்த மிருந்தால் ஞானிகூட அவைகளுடன் கூடி நடிப்பான்.

60. ஞானிக்குப் பிரபஞ்சம் ஆத்மரூபத்தைப் பார்க்கிலும் வேருகத் தோன்ருததுபோல் தவத்தினுலுண்டாகும் ஸித்திகளும் ஆத்மரூபத்தைப் பார்க்கிலும் வேறென்று தோன்ரு.

61. எவனுக்குப் பிராரப்த மில்லையோ அம்முனி (ஞானி) பரிபூர்ணமான சக்தியுள்ளவனுயினும் அலைகளில்லாத சமுத்திரம்போல் கொஞ்சமாயினும் அசையான்.

62. சுபாவமான ஆத்மாவில் நிலைபெற்றவன் வேருன மார்க்கத்தைத் தேடான். தனக்கு ஆத்மாவில் நிலை உண்டாகிறதே எல்லா சக்திகளுடைய கூட்டம் என்பதை அறிவான்.

63. பிரயத்தன மில்லாமல் உண்டாகும் தவம் ஸஹஜமானநிலை என்று சொல்லப்படுகிறது. அந்நிலையில் சக்திகள் பிறக்கும்.

64. எவன் ஞானம் சக்தியுடன் கூடாது என்று நினைக்கின்ருனே அவன் அறியாதவன். ஞானி எல்லா சக்தி யுடையதும் எங்கும் நிறைந்ததுமான தன் ஆத்மரூபத்தில் நிலைபெற்றுள்ளவனு யிருக்கிருன்.

---

## VII. மனம்.

65. மனமென்பது ஆத்ம சொரூபத்திலுள்ள ஓர் அதிசய சக்தி. அது ஆத்ம சொரூபத்தினின்று வெளிப் படும்போது ஜகம் தோன்றும். ஆகையால், ஜகம் தோன் றும்போது சொரூபம் தோன்றாது; சொரூபம் தோன் றும் (பிரகாசிக்கும்) போது ஜகம் தோன்றாது.

66. மனம் ஸகல நினைவுகளையும் தோற்றுவிக்கின் றது. நினைவுகளை யெல்லாம் நீக்கிப் பார்க்கின்றபோது, தனியாய் மனமென்றோர் பொருளில்லை; ஆகையால் நினைவே மனதின் சொரூபம்.

67. நினைவுகளை (மனதை)த் தவிர்த்து, ஜகமென் றோர் பொருள் அன்னியமாயில்லை. தூக்கத்தில் நினைவுக ளில்லை, ஜகமுமில்லை; ஜாக்ர சொப்பனங்களில் நினைவுக ளுள, ஜகமும் உண்டு.

68. சிலந்திப்பூச்சி எப்படித் தன்னிடமிருந்து வெளி யில் நூலை நூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக்கொள்ளு கிறதோ. அப்படியே மனமும் தன்னிடத்திலிருந்து ஜகத் தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக் கொள்ளுகிறது.

69. மனத்தின் சொரூபத்தை விசாரித்துக்கொண் டேபோனால் 'தானே' மனமாய் முடியும். 'தான்' என் பது ஆத்ம சொரூபமே.

70. தேகத்தில் நான் என்று கிளம்புவதெதுவோ அஃதே மனமாம். கட்டையைப் போன்ற ஜட பதார்த்த மாகிய இச்சரீரம் 'நான் நான்' என்று ஸ்புரித்து வழங்கி

வராது. ஆனால் இப்படி அவாந்தரமாகத் தேகத்தைக் குறித்து நானென்றெழும் போதமே, தற்போதமென்றும், அகங்காரமென்றும், அவித்தை யென்றும், மாயை யென்றும், மலமென்றும், ஜீவனென்றும், சூக்ஷ்மசரீர மென்றும் பலவிதமாகச் சொல்லப்படுகிறது.

71. நானென்கிற நினைவு தேகத்தில் முதலில் எந்த விடத்திற் றோன்றுகின்ற தென்று விசாரித்தால், ஹ்ருதயத்திலென்று தெரியவரும். அதுவே மனதின் பிறப்பிடம். நான், நான் என்று கருதிக்கொண்டிருந்தாலுங் கூட அவ்விடத்திற் கொண்டுபோய் விட்டுவிடும்.

72. சூக்ஷ்மமான மனம், மூளை இந்திரியங்கள் வாயிலாய் வெளிப்படும்போது ஸ்தூலமான நாமரூபங்கள் தோன்றுகின்றன ; ஹ்ருதயத்தில் தங்கும்போது அவைகள் மறைகின்றன.

73. ஒருவனுக்கே வெவ்வேறு வேலையில் வெவ்வேறு நாமம் வருவது போன்று மனமொன்றே விருத்தி பேதங்களை முன்னிட்டு மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்ற நாமங்களால் கூறப்படுகிறதே யன்றி வேறில்லை.

74. நல்ல மனமென்றும், கெட்ட மனமென்றும் இரண்டு மனங்களில்லை ; மனமொன்றே. வாசனைகளே சுபமென்றும் அசுபமென்றும் இரண்டுவிதம். மனம் சுபவாசனை வயத்ததாய் நிற்கும்போது நல்லமனமென்றும், அசுபவாசனை வயத்ததாய் நிற்கும்போது கெட்டமனமென்றும் சொல்லப்படும்.

75. விஷயங்களை அறிதற்கு சாதனமாய் இந்திரியங்கள் வெளியிலிருத்தலாற் புறக்கரணமென்றும், மனம் உள்

ளிருத்தலால் அகக்கரண மென்றும் கூறப்பட்டாலும் தேகத்தைக் குறித்தே அகம்புற மென்று சொல்லப்படு கிறதே யன்றி உண்மையில் உள்வெளி யென்பதே யில்லை.

76. மனம் எப்பொழுதும் ஒரு ஸ்தூலத்தை (உருவை) யனுசரித்தே நிற்கும் ; தனியாய் நில்லாது.

77. மனதின் ஸ்வபாவ (சத்துவ குண) நிலையில் அதற்கு மனமென்னும் பெயரில்லை. (அது ஞான ஸ்வரூப மேயாகும்) ஒன்றை யொன்றாக அறியும் விபரீத ஞானமே மனமெனப்படுகிறது.

78. மனமே சர்வதத்வாத்மக ஜீவேச்வரஜகத் சொரூபமாயிருத்தலான் இது எப்போது ஞானத்தால் ஆத்மாகாரமாகுமோ அப்போதே எல்லாம் ப்ரஹ்ம சொரூபமாகிற கைவல்யமாகு மென்று சொல்லப்படுகிறது.

---

## VIII. ஹ்ருதயமும் மனமும்.

79. தேகதாரி (ஜீவர்) களுக்கு ஸகல விருத்தி (வியாபாரங்) களும் எவ்விடத்திலிருந்து வெளிப்படுகின்றனவோ அவ்விடந்தான் ஹ்ருதய மெனப்படுகிறது. ரூபவர்ணனம் கேவல பாவனேயே. ஸகல விருத்திகளுக்கும் ' நான் ' என்கிற விருத்தி மூலம் (ஆதி) என்று சொல்லப்படுகிறது. அந்த ' நான் ' என்னும் புத்தி ஹ்ருதயத்திலிருந்து தான் வெளிப்படுகிறது.

80. இரத்த பிண்டத்தைப் பார்க்கிலும் ஹ்ருதயம் பிரத்யேகமானதே. (ஹ்ருத் + அயம்) ஹ்ருதயம் என்னும் பதப்பிரிவினுல் ஆத்ம ரூபமே ஹ்ருதய மெனப்படுகிறது.

81. * மார்த்தட்டில் ஹ்ருதயம் வலது புறத்தில் இருக்கிறது. இடது பக்கத்தில் அல்ல. அந்த ஹ்ருதய ஸ்தானத்திலிருந்து ஸுஷும்நா நாடியின் வழியாய் ஜோதி ஸஹஸ்ராரத்திற்கு (மூளைக்கு)ப் போகின்றது. அந்த ஜோதி ஸஹஸ்ராரத்திலிருந்து தேகத்திலெல்லாம் நாடிகளின் வழியாய்ப் பிரவகிக்கிறது. அதாவது அந்த ஜோதி தசேந்திரியங்களின் வழியாய் வெளியில் போகின்றது. அப்பொழுது உலக அனுபவம் உண்டாகின்றது. மனிதன் அவ்வனுபவங்களை ஆத்மப் பிரகாசத்தைப்பார்க்கிலும் பிரத்யேகமானவை என்று நினைப்பானுகில் சம்சாரத்தில் சிக்கிக்கொள்வான்.

---

........... * ' ஆம்பல ரும்பென வுள்ளே
யிருவிரல் வலத்தே யிருப்பதுமிதயம் "—(உள்ளது நாற்பது அனுபந்தம் 17-வது செய்யுள்)

82. சரீரத்தில் மீதியில்லாமல் அண்டமிருக்கும். ஹ்ருதயத்தில் மீதியில்லாமல் சரீர மிருக்கும். அதனல் சர்வமான அண்டத்தின் ரூபசங்கிரகம், அதாவது அண்ட முற்றிலும் அடங்கியது ஹ்ருதயம்.

83. புவனம் மனதைப் பார்க்கிலும் வேறல்ல. மனம் ஹ்ருதயத்தைவிட வேறல்ல. அதனல் ஹ்ருதயத்தில் எல்லாப் பிரபஞ்சமும் முடிகிறது.

84. பிரஹ்மாண்டத்தில் சூரியமண்டல மிருக்கிறது போல் பிண்டத்தில் ஹ்ருதய மிருக்கிறது. அண்டத்தில் சந்திர பிம்பத்தைப்போல் பிண்டத்தில் ஸஹஸ்ராரத்தில் (மூளையில்) மனமிருக்கிறது. ஒளியைச் சந்திரனுக்கு சூரியன் கொடுக்கிறதுபோல் ஹ்ருதயம் மனதுக்கு வெளிச்சத்தைத் தருகிறது. சூரியனுடைய பரோக்ஷத்தில் அதாவது சூரியன் இல்லாதபொழுது இராத்திரி காலத்தில் சந்திரனுடையவெளிச்சத்தைப் போல் ஹ்ருதயத்தின் பரோக்ஷத்தில் மனிதன் மனதை மாத்திரம் காண்கிறுன்.

85. தேஜசுக்கு மூலமும் ஸத்தியமுமான ஆத்மாவின் ஸ்வரூபத்தைக் காணுதவனுய் பாவங்களை (தோற்றங்களை) வேருக மனதினல் பார்த்துக்கொண்டு பாமரன் நிலையின்றி நாசமடைகின்றுன். ஞானியானவன் ஹ்ருதயத்தில் இருக்கிறவனுய் ஹ்ருதய ஒளியில் அடங்கியிருக்கும் மனமாகிய வெளிச்சத்தைப் பகலில் சூரியனில் கலந்திருக்கும் சந்திர வெளிச்சத்தைப் போல் காண்கிறுன்.

86. வித்வான்கள் மனதை ஞானத்திற்கு வாச்சியார்த்த மென்கிறுர்கள். ஹ்ருதயத்தை லக்ஷ்யார்த்த மென்கிறுர்கள். ஹ்ருதயத்தை விட ஈச்வரன் வேறல்ல.

87. பார்க்கிறது பார்க்கப்படுவது என்கிற பேத புத்தி மனதில் இருக்கிறது. ஹ்ருதயத்தில் (ஆத்மாவில்) இருக்கிறவனுக்கு திருக்திருசியங் (பார்க்கிறதும் பார்க்கப் படுவதுமாகியவை)களில் ஐக்கியம் (ஒற்றுமை) உண்டாகிறது.

88. மூர்ச்சை, நித்திரை, அதிக சந்தோஷம், துக்கம், ஆவேசம், பயம் முதலிய நிமித்தங் (காரணங்)களினால் அடிபட்ட விருத்தி (வியாபாரம்) தன்னிடமாகிய ஹ்ருதயத்தில் ஒடுகின்றது. அச்சமயத்தில் தேகதாரி (ஜீவர்)களுக்கு ஹ்ருதயத்தின் சம்பந்தம் தெரியாது. ஸமாதியிலோ தெரியும். நாமபேதம் நிமித்த பேதத்தினால் உண்டாகின்றது.

(இக்காரணத்தினால் மூர்ச்சை, கோபம் முதலிய குணங்களினால் அடிக்கப்பட்ட மனமுள்ளவனுக்கு ஒன்றும் தோன்றாது. மனம் ஹ்ருதயத்தில் இரண்டு விதமாகக் கலக்கும். முதலாவது காமாதி குணங்களினால் அடிக்கப் படுவது. இரண்டாவது மனம் ஸமாதியை அனுசரிக்கிறதினால் உண்டாகிறது. இது ஆத்மஞான விருத்தி)

---

## IX. ஹ்ருதய கிரந்தி

89. சரீரம் ஆத்மா இவ்விரண்டின் சம்பந்தம் கிரந்தி (முடிச்சு) எனப்படுகிறது. ஆத்மாவின் சம்பந்தத்தினலேயே சரீர சம்பந்தமான ஞான முண்டாகிறது. சரீரம் ஜட ரூபம், ஆத்மா சைதன்யம். ஞானத்தினல் இவ்விரண்டின் சம்பந்தம் ஊகிக்கப்படுகிறது.

90. ஆத்மாவின் *நிழ (சாய)லினல் நிறைக்கப் பட்ட சரீரம் அசைகின்றது. நித்திரை முதலானவைகளில் ஆத்மா சரீரத்தை கிரகிக்காததினல் ஆத்மாவிற்கு ஸ்தானம் ஊகிக்கப்பட்டது.

91. ஸூக்ஷ்மமான மின்சாரசக்தி ஸ்தூலமான தந்தி (கம்பி) முதலியவைகளில் ஒடுவதுபோல் சைதன்யப் பிரகாசத்தின் ஓட்டம் சரீரத்தின் நாடிகளில் உள்ளது. (ஒடுகிறது.)

92. சூரியன் உலகத்தைப் பிரகாசிக்கச் செய்வது போல் சைதன்யத்தின் வெளிச்சம் ஒரு இடத்தை ஆசிரயித்து (ஒட்டி) பிரகாசிக்கிறதாகி, தேகமெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றது.

(சூரியனுடைய வெளிச்சம் பூமி அல்லது ஏதாவது ஒரு வஸ்துவின்மேல் விழுந்து மறுபடியும் அவ்விடத்திலிருந்து பிரதிபிம்பிக்கும் (Reflection) பொழுது தான் அதை நாம் காண்கிறேம். ஆனல் அரூபமான கேவலவெளியில்(அதாவதுசூன்யம் அல்லது ஆகாயத்தில்)அதைக்காண்

---

* நிழ (சாய)லினல் = பிரதிபிம்பத்தினல்.
*i. e*, due to reflection

கிறதில்லை. அவ்விதமாகவே ஆத்மா பஞ்ச பூதங்களினு லேற்பட்ட சரீரங்களில் விழுந்து அங்கிருந்து பிரதிபிம்பிக்கும் பொழுதுதான் அதை எளிதாகக் காணத்தகும். ஆகையால் ஆத்மவிசாரி எப்பொழுதும் பஞ்சபூதாத்மகமான சரீரங்களைத் தன்னுடைய வெளிக்கண்கள் பார்த்துக் கொண்டிருந்தாலும் தன் உட்கண்ணுக்கெதிராக அச்சரீரங்களில் பிரகாசிக்கும் சைதன்யத்தையே வைத்துக்கொண்டிருக்க யத்தனிக்க வேண்டும்.

93. ஆத்மப் பிரகாசம் சரீரத்தில் வியாபிக்கிறதினுல் அனுபவங்கள் உண்டாகின்றன. அந்த ஆத்மஜோதி இருக்கிற ஸ்தலத்தை வித்வான்கள் ஹ்ருதயமென்று கூறுகிறுர்கள்.

94. நாடிகளின் சக்தி விலாச (விசித்திர) த்தினுல் சைதன்ய கிரணங்களின் கதியும் (ஓட்டமும்) ஏற்படுகிறது. தேகத்தின் சக்திகளெல்லாம் பிரத்தியேகமாக நாடிகளை ஆசிரயித்திருக்கின்றன. (ஆகையால் சைதன்யப் பிரகாசத்திற்கு சரீர ஆரோக்கியம் அவசியமாகின்றது.)

95. சைதன்யம் ஒரு நாடியிலிருக்கிறது; அதை ஸுஷும்னை என்கிறுர்கள். சிலர் அதை ஆத்மநாடி என்கிறுர்கள். மற்றும் சிலர் அதை அமிருதநாடி என்று சொல்லுகிறுர்கள்.

96. பிரகாசத்தினுல், தேகத்திலெல்லாம் வியாபித்து ஜீவன் அபிமானமுள்ளவனுகி தேகத்தை ஆத்மாவென்றும் உலகம் தன்னைப்பார்க்கிலும் வேறென்றும் நினைக்கிறுன்.

97. புத்திமான் அபிமானத்தையும், தேகம் ஆத்மாவென்கிற புத்தியையும் விட்டு நிச்சலனுய் ஆத்மாவின் ஸ்தி

தியை விசாரிப்பானுகில் நாடிகளுடைய மதனம் (கடைதல்) உண்டாகிறது. இவ்விதமாக நாடிகளைச் சோதிக்கிற (கடைவ)தினுல் ஆத்மா அந்நாடிகளிலிருந்து வேறுபடுத் தப்பட்டு கேவலம் அம்ருத (ஆத்ம) நாடியை ஆசிரயித்துப் பிரகாசிக்கின்றது. அப்பொழுது ஆத்மாவைவிட வேறெது வும் காணப்படாது.

98. ஸாந்நித்ய (சமீப) பலத்தினுல் ஏதாவது கிர கிக்கப்பட்டாலும் வேருக அது நினைக்கப்படாது. பாம ரன் தன்னுடைய தேகத்தை யறிகிறதுபோல் ஞானி ஆத் மாவை நன்ருகத் தெரிந்துகொள்ளுகிருன்.

99. பாமரனுக்கு ரூபம் முதலியவை எங்கு மிருப்ப தாகத் தோன்றுவதுபோல் எந்த அறிஞனுக்கு ஆத்மா வெளியும் உள்ளும் எங்குமிருப்பதாகத் தோன்றுகிறதோ (அதாவது பிரகாசிக்கிறதோ) அவன் கிரந்திகளை (முடிக ளைப்) பேதித்தவ (அவிழ்த்தவ) னுவான்.

100. நாடிபந்தம் அபிமானம் என்று கிரந்திகள் இரண்டு. நாடிபந்தத்தினுல் ஸ்தூலமுற்றும் ஸூக்ஷ்ம மாயினும் ஜோதி காண்கிறது. [அதாவது:—தேகம், தேகாபிமானம் என்னும் முடிகளிரண்டு. தேகி (ஜீவன்) தேகாபிமானத்தினுல் தேகத்தைப் பார்க்கிருன்.]

101. அக்னியில் சுடப்பட்ட இரும்புகுண்டு அக்னி ரூபமாவதுபோல், ஆத்மவிசார மென்கிற அக்னியினுல் சுடப்பட்ட சரீரம் ஆத்மஜோதி மயமாகும். அப்பொழுது சரீரம் முதலியவற்றை ஆசிரயித்த பூர்வ (முன்) வாசனைக ளெல்லாம் நசிக்கின்றன. ஆத்மா சரீரி ஆகாமையினுல் கர்த் தத்வம் (செய்யும் அதிகாரம்) ஆத்மாவிற்குக் கிடையாது.

இதற்குக் கர்த்தத்வம் இல்லாமையினுலே கர்மவிநாசம் சொல்லப்பட்டது. அதற்கு அந்நியமானது ஒன்றும் இல்லாமையினுல் சந்தேகங்கள் உண்டாகா.

102. எல்லா நாடிகளிலிருந்தும் திரும்பினதாய் ஜோதி எப்பொழுது ஒரு நாடி (ஆத்மநாடி)யையே ஆசிரயித்திருக்கிறதோ அப்பொழுது கிரந்திகளை (முடிகளை)ப் பேதித்துக்கொண்டு ஆத்மஸ்திதியை அடைகின்றது. ஒரு காலத்தில் (அதாவது ஒருதரம்) முடிச்சுகளை அவிழ்த்துக் கொண்டவன் மறுபடியும் பெத்தனுகான். இதுதான் உத்தமமான ஸ்திதி. இதுதான் உயர்ந்த சக்தி. இதுதான் எல்லாவற்றிற்கும் மேன்மையான சாந்தி.

———

## X. குருவும் கடவுளும்.

103. சற்குருவின் லக்ஷணங்கள் என்னவென்றால் சந்ததமும் சொரூபத்தில் நிலையுற்று கம்பீரமாய் விளங்கல், நிரந்தர அபேததிருஷ்டி யுடைமை, தான் மெய்ஞ்ஞானி அல்லது முத்தன், தன்னைச் சூழ்ந்துள்ளோர் அஞ்ஞானிகள் அல்லது பெத்தர் என்ற பேதபாவம் சற்றுமின்மை, எப்போதும் எவ்விடத்தும் எக்காரணத்தாலும் கலங்காத தீரத்தன்மையோடிருத்தல் முதலியனவாம்.

104. சற்குரு சர்வேச்வர சொரூபமேயாகும். எங்ஙனமெனின், எந்த ஜீவனானது மெய்ஞ்ஞான நிலை அல்லது ஈச்வர பதத்தை விரும்பி சர்வதா நிஷ்காம்ய பக்தி செய்துவந்ததோ, அந்த ஜீவனுக்கு சர்வேச்வரனே, அப்பக்தியின் முடிவில் இயல்பாகத் தனக்குள்ள சத்து, சித்து, ஆனந்தமென்ற மூன்றம்சங்களோடு கருணையால் நாம ரூபமென்ற மற்றிரண்டம்சங்களையும் கொண்டு மனிதனாய் வெளிவந்து அனுக்கிரகவாயிலாக சீடனைத் தன்மயப்படுத்தல் சித்தாந்தமாகலான், சந்தேகமின்றி சற்குருவை சர்வேச்வரனேயெனக் கொள்ளலாம்.

105. சில பக்குவிகளுக்கு அவ்வீசனுள்ளீடாக (அறிவுக்கறிவாக)வே நின்று தத்துவ நிலையினை உணர்த்துவதுமுண்டு.

106. சற்குருவின் அனுக்கிரகம் மனோவாக்குகட்கு அடங்கினதன்று. ஆனால் எங்ஙனம் பொய்யான சொப்பன சிங்க தரிசன மாத்திரத்தாலேயே யானை தூக்கத்தினின்றும் விழிப்பினை அடைகின்றதோ, அங்ஙனமே சற்குருவின் கிருபையாலேயே சீடனும் அஞ்ஞான நித்திரையினின்று மெய்ஞ்ஞான விழிப்பினை அடைகின்றான்.

107. குருவும் கடவுளும் உண்மையில் வேறல்லர். புலி வாயிற்பட்டது எவ்வாறு திரும்பாதோ, அவ்வாறே குருவினருட்பார்வையிற் பட்டவர்கள் அவரால் ரக்ஷிக்கப் படுவரேயன்றி யொருக்காலும் கைவிடப்படார். எனினும் குரு காட்டிய வழிப்படி தவறாது நடக்கவேண்டும்.

108. ஈசன்பேரில் எவ்வளவு பாரத்தைப் போட்டாலும், அவ்வளவையும் அவர் வகித்துக்கொள்கிறார். ஸகலகாரியங்களையும் ஒரு பரமேச்வர சக்தி நடத்திக் கொண்டிருக்கிறபடியால், நாமுமதற்கடங்கியிராமல், 'இப்படிச் செய்யவேண்டும், அப்படிச் செய்யவேண்டும், என்று ஸதா சிந்திப்பதேன் ? புகைவண்டி (Railway Train) ஸகல பாரங்களையும் தாங்கிக்கொண்டு போவது தெரிந்திருந்தும், அதிலேறிக்கொண்டு போகும் நாம் நம்முடைய சிறிய மூட்டையையு மதிற் போட்டுவிட்டு சுகமாயிராமல், அதை நமது தலையிற் றாங்கிக்கொண்டு ஏன் கஷ்டப்பட வேண்டும் ?

109. இச்சா ஸங்கல்ப யத்நமின்றி யெழுந்த ஆதித்தன் (சூரியன்) சந்நிதி மாத்திரத்தில் காந்தக்கல் அக்கினியைக் கக்குவதும், தாமரை மலர்வதும், நீர் வற்றுவதும், உலகோர் தத்தங் காரியங்களிற் பிரவிருத்தித்து இயற்றியடங்குவதும், காந்தத்தின் முன் ஊசி சேஷ்டிப்பதும் போல, ஸங்கல்ப ரஹிதராயிருக்கும் ஈசன் சந்நிதான விசேஷ மாத்திரத்தால் நடக்கும் முத்தொழில் அல்லது பஞ்சகிருத்யங்கட் குட்பட்ட ஜீவர்கள் தத்தம் கர்மாநுசாரம் சேஷ்டித்தடங்குகின்றனர். அன்றி அவர் ஸங்கல்ப ஸஹிதரல்லர்; ஒரு கருமமு மவரையொட்டாது. அது லோககருமங்கள் சூரியனை யொட்டாததும், ஏனைய சதுர்பூதங்களின் குணகுணங்கள் வியாபகமான ஆகாயத்தை யொட்டாததும் போலும்.

## XI. நியமமும் பிராணாயாமமும்.

110. ஆத்ம விசாரத்திற்கு ஆரம்பித்தவர்களாய் வைராக்ய முடையோர்களுக்கும் யோகம் அப்யசிக்கிற ஸத்புருஷர்களுக்கும் நியமங்களாகின்ற ஸ்நானம், ஸந்த்யை, ஜபம், ஹோமம், வேதாத்யயனம், தேவபூஜை, நாம கீர்த்தனம், தீர்த்த யாத்திரை, யஜ்ஞம், தானம், விரதங்கள், ஆகார நியமம் முதலியன மேன்மேலும் சித்த சுத்தியை உண்டாக்குகின்றன. உறுதி நிலையை சாதித்த சித்தர்களிடமிருந்து நியமங்கள் தாமே விலகுகின்றன.

111. எல்லா நியமங்களிலுஞ் சிறந்த மித ஸாத்விக ஆகார நியமத்தால் மனதின் ஸத்வகுணம் விருத்தியாகி, ஆத்மவிசாரத்திற்கு சகாயமுண்டாகிறது.

112. மனோ வாக் சரீரங்களினால் செய்யப்பட்ட ஸுகிருதம் (நற்செய்கை) மனோவாக் சரீரங்களினால் செய்யப்பட்ட துஷ்கிருதத்தை (துர்ச்செய்கையை)த் தடுக்கின்றது.

113. மிகவும் பரிசுத்தமான மனமுடையவர்களாய் பரிபாக (பரிபூரண) மடைந்தவர்களாய் ஆத்மவிசாரத்திற்கு அதிகாரிகளானவர்கள் செய்த இக் கருமக்கூட்டம் உலகத்திற்கு உபயோகப்படுகின்றது.

114. விஷயங்களில் ஆஸக்தமான (அதாவது பிடிப்புள்ள) சித்தமுடையவரும் இடைவிடா வியாபார முடையவருமாகிய மனிதர்களின் மனமானது துர்வாசனையினால் வல்லமை பெற்றதனால் அதை உட்படுத்திக் கொள்வது அசாத்தியமாயிருக்கும்; சலிக்கும் பிராணவாயுவைத்

தடுத்து சஞ்சலமான அம்மனத்தை உட்படுத்திக்கொள்ள வேண்டும். அப்பொழுது கயிற்றினுல் கட்டப்பட்ட பசுவைப் போல் மனம் சலிக்காது.

115. மனதிற்கும் பிராணனுக்கும் பிறப்பிடமொன்றே. நினைவே மனதின் சொரூபம். நானென்னும் நினைவே மனதின் முதல் நினைவு; அதுவே யகங்காரம். அகங்கார மெங்கிருந்து உற்பத்தியோ, அங்கிருந்துதான் மூச்சும் கிளம்புகின்றது. ஆகையால் மன மடங்கும்போது பிராணனும் பிராண னடங்கும்போது மனமுமடங்கும்.

116. பிராணன் மனதின் ஸ்தூல ரூப மெனப்படும். மரணகாலம் வரையில் மனம் பிராணனை உடலில் வைத்துக் கொண்டிருந்து, உடல் மரிக்குங்காலத்தில் அதனைக் கவர்ந்துகொண்டு போகின்றது. ஆகையால்பிராணுயாமம் மனதை யடக்க சகாயமாகுமே யன்றி மனோநாசஞ் செய்யாது. சலிக்கும் பிராணனைத் தடுக்கிறதினுல் விருத்திகளை அடக்கலாம். வியாபாரங் (விருத்தி) களை அடக்குவதினுல் அவ் விருத்திகள் ஜனிக்கு மிடமாகிற ஹ்ருதயத்தில் நிலை பெற ஹேதுவாகும்.

117. மனதினுல் பிராணரூபமாகிய வாயுவை எதிர் பார்க்கிறதே பிராணரோதம். (அதாவது பிராணனைக் கட்டுப்படுத்துகிறது). பிராணவாயுவை எதிர்பார்(கவனி)க்கிறதினுல் கும்பக முண்டாகின்றது. எவர்களுக்கு இவ்விதமாகக் கும்பகத்தை சாதிக்க வல்லமையில்லையோ அவர்களுக்கு, ஹடயோகத்தை அனுசரித்தால் கும்பகமேற்படும்.

118. காற்றை ஒருதரம் பூரித்து (நிரப்பி), ஒருதரம் ரேசித்து (விட்டு), நாலுதரம் கும்பிக்க (நிறுத்த) வேண்

டும். இதனால் நாடிகள் சுத்தியாகும். நாடிகள் சுத்தமானால் கிரமமாய் பிராணனை அடக்கலாம். எல்லா விதங்களினாலும் பிராணவாயுவை அடக்குவதை சுத்தமான கும்பகமென்பார்கள்.

119. ஞானிகளிற் சிலர் சரீரமே ஆத்மாவென்னும் பாவத்தை விடுவது ரேசகமென்றும், தன்னைத்தான் தேடுகிறது பூரகமென்றும் தன்னுடைய சஹஜமான நிலை கும்பகமென்றும் சொல்லுகிறார்கள்.

---

## XII. மந்திர பிரணவ ஜபம்

120. அசைவற்ற மனத்தால் இடைவிடாமல் ஜபித்த மந்திரங்களினாலாவது பிரணவ ஜபத்தினாலாவது சிரத்தையுள்ளவர்களுக்கு சித்தி (பலன்) உண்டாகும். இவ்வகை மந்திரங்களுடைய அல்லது சுத்தமான பிரணவத்தினுடைய ஜபத்தினால் விஷயங்களிலிருந்து விலகின வியாபாரம் தன்னுடைய ஆத்ம ரூபத்துடன் சேருகின்றது.

121. பிரணவஜபம், நாமஜபம், மந்திரஜபம் இவைகளினால் மனத்திற்கு நிலையுண்டாகும். அப்பொழுது மனதோடு மந்திரப் பிராணன்கள் ஐக்கியமாகும். அப்படி பிராணனுடன் மந்திராக்ஷரங்கள் கூடுவதே தியானம். திடமான தியானம் ஸஹஜ ஸ்திதியை உண்டாக்கும்.

122. கடவுள் ஸ்தோத்திரம், உச்ச ஜபம் (அதாவது உரக்க ஜபித்தல்), மந்த ஜபம், மானசிக ஜபமென ஜபம் பலவகைப்படும். இவைகள் முறையே ஒன்றினொன்று மேலாகும். மானசிகஜபம் தியானத்திலும் வேறன்று. ஆதலின் அது உத்தமமாகும். அதிலும் நெய் வீழ்ச்சியைப்போலும் ஆற்றின் பிரவாகம் போலும் செல்லும் மானசிக ஜபரூபதியானம் விசேஷமாம்.

123. பிரணவம் என்பது அகார, உகார, மகார, அர்த்தமாத்திரை யென்னும் மூன்றரை மாத்திரைகள் கூடிய ஓங்காரமாம். இவற்றில் அகார மென்பது ஜாக்ர விச்வஜீவ ஸ்தூல தேகங்களென்றும், உகார மென்பது சொப்பன தைஜஸஜீவ சூக்ஷ்மதேகங்களென்றும், மகார மென்பது சுழுப்தி பிராஜ்ஞஜீவ காரணதேகங்களென்றும்,

அர்த்தமாத்திரை யென்பது துரியம் அல்லது ஆத்ம சொரூபம் அல்லது அஹம்சொரூப மென்றும், இதற்கப் பாற்பட்ட நிலை துரியாதீதமாகிய ஆனந்தமாத்திர சொரூபமென்றும் சொல்லப்படும்.

124. இந்நான்காவதான (அர்த்தமாத்திரை) அஹம் சொரூபமே மற்ற அகார உகார மகாரங்களென்னும் மூன்று மாத்திரைகளடங்கியுள்ள அமாத்ரை சொரூப மென்றும் மௌனாக்ஷர மென்றும், அஜபை யென்றும், ஜபியாமல் ஜபித்தலென்றும், பஞ்சாக்ஷராதி சர்வ மந்தி ரங்களின் சாரமான அத்வைத மந்திர மென்றும் கூறப் படும்.

இவ் வெதார்த்த அர்த்தம் சித்தித்தற் பொருட்டே பிரணவத் தியானம் செய்யப்படுவதாம். இம் மனோ மாத் திர பிரணவத்தியானத்தின் பரிபாக அவஸ்தையே சமாதி யெனப்பட்டு நிரதிசயாநந்த மோக்ஷகதியைக் கொடுக்கும்.

---

## XIII. தியானம்

125. தியானமார்க்கங்கள் பேதமாகத் தோன்றினும் முடிவில் ஒன்றாகவே முடியும். அதைப்பற்றி சங்கிக்கத் தேவையில்லை. மனப்பரிபாகத்துக்குத் தக்க மார்க்கத்தை அனுஷ்டிக்கலாம்.

126. அதிகாரிகளின் பரிபாகநிலைக்குத் தக்கபடி வேதங்களில் அநேக மார்க்கங்கள் கூறப்பட்டிருந்தாலும் மனோநாசமே மோக்ஷமாகலான் சர்வமுயற்சிகளின் தாற்பரியமும் மனதை அடக்குவதிலேயேயாம்.

127. பிராணபந்தனம் அல்லது யோகம், மனோபந்தனம் அல்லது ஞானம் ஆகிய இவ்விரண்டும் மனவடக்கத்திற்குரிய முக்கிய சாதனங்கள். அவரவர் கர்மாநுசாரம் இரண்டிலொன்று சுகமாய்த் தோன்றும். என்றாலும் முரட்டு மாட்டுக்குப் புல்லைக்காட்டித் தடவிக்கொடுத்து வசப்படுத்திக் கட்டுவதுபோல் ஞானமும், அடித்துக் கட்டுவதுபோல் யோகமுமென்றே அறிஞர் கூறுவர்.

128. மனவொடுக்கம் லயம் நாசமென இருவகைப்படும். லயமுற்ற மனம் மறுபடியும் கிளம்பும்; நாசமுற்றது மீண்டும் கிளம்பாது. அதனால் பிராணாயாமத்தினாலாவது அல்லது கேவல கும்பகத்தினாலாவது லயப்பட்ட மனதை அதோடு விட்டுவிடாமல் பிரத்தியாகாரம், தாரணை, தியான முதலியவற்றில் கிரமமாகப் பழக்கிவரின், முடிவில் விசாரபலரூப சொரூப சாக்ஷாத்காரம் பெறுதல் திண்ணம்.

129. முக்கிய அதிகாரிகள் வேதாந்தவிசாரத்தால் வஸ்துநிர்ணயந் தெரிந்து, தன்னையும் சகலத்தையும்வஸ்து

மயமாகப் பார்த்தலாலும்; மத்திம அதிகாரிகள் கேவல கும்பகத்தோடு மனதை ஹ்ருதயத்தில் நிறுத்தி நெடுநாள் வஸ்துவை தியானிப்பதாலும்; மந்த அதிகாரிகள் பிராணு யாமாதியவற்ருல் கிரமமாக அந்நிலையை அடைவதாலும்; மனதை ஆத்மாவில் ஸ்திரப்படுத்திக் கதிபெறுவார்கள்.

130. ஒரு வஸ்துவின்மேல் தியானிப்பதினுல் சித்தம் ஏகாக்கிரத்தை யடையும். (அதாவது ஒன்றின்மேல் நின்றதாகும்.) சித்தம் ஏகாக்கிர மடைந்ததானுல் ஆத்மரூபத்தில் நிலைபெறும். இக்காரணத்தினுல் ஆத்மரூபத்தைக் காணவேண்டுமென்று இச்சிக்காமல் தியானிக்கிறவனும் ஆத்மாவில் நிலைபெறுகின்ருன். ஆத்மாவைக் குறித்து விசாரிக்கிறவன் ஆத்மரூபத்தை யறிந்து ஆத்மாவில் நிலைக்கின்ருன்.

131. தேவதையையாவது, மந்திரத்தையாவது, தியானிக்கத்தகுந்த உத்தமமான மற்றெரு லட்சியத்தையாவது தியானிக்கிறவனுடைய தியேயவஸ்து (தியானிக்கப்படும் வஸ்து) கடைசியில் ஆத்மாவென்கிற பெரிய வெளிச்சத்தில் ஐக்கியமாகின்றது.

132. ஒருவன் தியானித்துக்கொண்டிருந்தவனுய் சாந்தியடைகிருன். மற்றெருருவன் அறிந்து அமைதி யடைகின்ருன். இவ்விதமாக ஆத்மாவைப்பற்றி விசாரிக்கிறவனுக்கும், தியானஞ்செய்கிறவனுக்கும் கதி (முடிவு) ஒன்றே தானுகும்.

133. சதாகாலமும் மனதை ஆத்மாவில் வைத்திருப்பதற்குத்தான் 'ஆத்ம விசார' மென்றுபெயர்; தியானமோ தன்னை ஸச்சிதானந்த ப்ரஹ்மமாக பாவிப்பது.

134. தியானஸ்தானங்களாகக் கொள்ளப்படும் * ஆறுதார முதலியவனைத்தும் கற்பனைகளேயாம். இவை யாவும் ஆரம்பயோகிகளுக்கே உரியன.

135. மூர்த்தித்தியானத்தாலும், மந்திர ஜபத்தாலும் மனம் ஏகாக்கிரத்தை யடைகிறது. சதா சலித்துக் கொண்டிருக்கும் யானையின் துதிக்கையில் ஒரு சங்கிலியைக்கொடுத்தால் அவ்யானை எப்படி வேறொன்றையும் பற்றும லதையே பற்றிக்கொண்டு செல்லுமோ, அப்படியே சதா சலித்துக்கொண்டிருக்கும் மனமும், அதனை ஏதோ ஒரு நாமம் அல்லது ரூபத்திற் பழக்கினால் அதையே பற்றிக்கொண்டிருக்கும். மனம் அளவிறந்த நினைவுகளாய் விரிகின்றபடியால் ஒவ்வொரு நினைவும் அதி பலவீனமாகப் போகின்றது. நினைவுக ளடங்க வடங்க ஏகாக்கிரத்தன்மை யடைந்து அதனாற் பலத்தை யடைந்த மனதிற்கு ஆத்மவிசாரம் சுலபமாய் சித்திக்கும்.

136. வெளியிலுள்ள நாமரூபங்களில் ஓடியுழன்று திரியும் மனதை ஒருவழிப்படுத்தற்கு மனோமாத்திர பிரணவத் தியானம், புருவமத்தியநாட்டம், நாசிகாக்ரத்ருஷ்டி, நாதானுசந்தானம் ஆகியவை சகாயமாம். இவைகளை சிறிது காலம் அப்பியாசிக்க மனம் ஒருமுகப்படும். இப்படி யொருமைப்பட்ட மனம் ஓரிடமேயிருக்க யோக்கியமானதாகும். இதனையே பிரத்தியாகாரமென்று சொல்லுவார்கள். இதன் பின் தாரணை செய்யவேண்டும்.

* ஆறுதாரங்களாவன :—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஜ்ஞை என்பனவாம்.

137. தாரணையாவது மனதை தியானயோக்யமானதோர் ஸ்தானத்தி லிருத்துவதாம். ஹ்ருதயமும் ப்ரஹ்மரந்திரமுமே சிரேஷ்டமான தியானயோக்ய ஸ்தானங்களாம். இவ்விரண்டிடங்களிலுமுள்ள அஷ்டதள பத்மங்களின் மத்தியில் ஆத்மதேவதாரூப ப்ரஹ்மசொரூபமே தீபஜ்வாலைபோலப் பிரகாசித்துக் கொண்டிருப்பதாகப் பாவித்து மனதை அதில் ஸ்திரமாய் நிறுத்துவதாம்.

138. தியானமாவது சொரூபத்தினும் தான்வேறில்லை யென்று * ஸோஹம்பாவனையால் தியானிப்பதாம். இதிலும் நானாரென்னும் விசாரத்தால் விசாரிக்கில் ஹ்ருதய கமலத்தில் ஆத்மா 'நான் நான்' எனத் தான்றானே ஜ்வலித்துக்கொண்டிருப்பது விளங்கும். இவ்வனுசந்தானரூப தியானமே சிரேஷ்டமாம்.

139. மூர்த்தித்தியான முதலியவற்றில் தியானிக்கப்படும் வஸ்துவை வேறாகக் கருதிப் புரியும் பாவனையிலும் † "ஈசனே நான்" என்னும் இந்த பேதமற்ற பாவனையே உத்தமமானது. இத்தன்மை வாய்ந்த அபேத பாவனுபலத்தினல் பாவனையற்ற ஸத்பாவத்தில் நிலைத்தலே பரபக்தி (உத்தம பக்தி)யாகும்.

140. தியானத்தில் அவசியம் கவனிக்கப்படவேண்டிய அம்சங்கள் சிலவுள. அதாவது, ஆத்மநிஷ்டன் தன் ஏகாக்கிரத்தன்மையினை விட்டு நழுவுவானாயின், அப்

---

* ஸ: + அஹம் = ஸோஹம். ஸ:—பரமாத்மா, அஹம்—நானெனவிளங்கும் ஆத்மா.

† இது அத்வைத தியானம். ரூபத்யானத்தை அப்பியாசிப்போர் இதை கவனிப்பது முக்யம்.

போது அங்குத் தோற்றமாகும் பற்பல காட்சிகளாகிய மனோ கற்பிதங்களை யெதிரிட்டறிவதனாலோ, நாதமுதலியவற்றின் நாட்டத்தினாலோ, அன்றி புறத்தில்தோன்றும் நாமரூபத்தோடுள்ள ஈச்வரமூர்த்தியாதிகளின் தரிசனங்களாலோ ஏமாறக்கூடாது. திருசியங்களை அறியுமறிவே சத்தியமன்றெனின் அறிபடுபொருள் எங்ஙனம் சத்தியமாகும்?

141. மனதிற்குத் தன்னிலையில் பிடிப்பேற்படுகிறவரையில் சாதனைக்கேதேனும் ஒருபாவனை அத்தியாவசியமாகும். இன்றேல் விருத்திகளேனும் உறக்கமேனும் அடிக்கடி வந்து தாக்கும்.

142. சாதகன் அனுஷ்டித்தற்கான நெறிகள் மித ஆகார நித்திரை வார்த்தையாதிகளே.

143. எவ்வகை சாதனங்களாலேனும் ஒரு விருத்திக்குக்கூட இடந்தராதிருத்தலே சாதனைக்குச் சிறப்பாம்.

144. அகங்கார மமகாரங்கள்முற்றும் நசிக்கிறவரை அதாவது மனம் முயற்சியின்றியே விருத்தியற்ற நிலையினை ஸஹஜமாக அடையும்வரை நிரந்தர சாதனை (தியானம்) வேண்டும்.

145. பிராரப்தவசமாகவே யாவும் நிகழுமென்பது உண்மையெனினும், இவைகளெல்லாம் வெளிமுகத்திற்கேயொழிய வுண்முகத்திற் கன்று. ஆகவே உள்ளபடியே தன்னைத் தேடுவோன் எவ்விதத் தடைகளுக்கு மஞ்சான். தடை யென்ற நினைவே பெருந்தடையாம்.

146. மனம் ஸாந்நித்யத்தினால் உலகை விஷயங்களைத் தெரிந்துகொண்டிருந்தாலும் பேதத்தை கிரகிக்காமல்

அதாவது வேறு என்பதை யறியாமலிருந்தால் யோகத் திற்கு இடையூறுண்டாகாது.

147. கோரிக்கைக்காக ஸமாதி யோகத்தை அப்பி யசிக்கிறவனுக்கு நிச்சயமாக அக்கோரிக்கை பலிக்கும். அப்படி ஒரு கோரிக்கையை அடையவேண்டு மென்று யோகத்தை அப்பியசித்து, விருத்திரோத மகிமையினால் அதாவது வியாபாரத்தைத் தடுக்கிற வல்லமையினால் மத் திய காலத்தில் பூர்ணஞானியானால், அம்முதல்கோரிக்கை அவனுக்குப் பலிக்கும். ஆனால் அதனால் அவன் சந்தோ ஷிக்கான்.

148. யோகம், ஞானம் ஆகிய இவ்விரண்டு மார்க் கங்களில் தனக்குப் பிரியமாகத் தோன்றுவதையாவது அல்லது இரண்டையுமேயாவது சமயோசிதமா யனுஷ் டிக்கலாம். எவ்விதத்திலேனும் ஆத்ம சொரூபமாகிற தன்னிடத்தில் மனதை நிறுத்தி எப்போதும் தன்னை மறவாதிருக்க வேண்டு மென்பதே முக்கிய தாற்பரியம். மனமொன் றடங்கினால் எல்லாம் கைவந்ததாகும்.



# XIV. பக்தி.

149. இடைவிடாத தைலதாரை (எண்ணெயின் வீழ்ச்சி)யைப்போன்ற அன்பே பக்தியென்று சொல்லப் படுகின்றது. பரமேசுவரனிடத்தில் தைலதாரையைப் போலப் பிரவகிக்கிற அந்த அன்பு இச்சிக்காதவனுடைய புத்தியையும் ஆத்மரூபத்தை உண்மையாக அடையச்செய் கிறது.

150. பண்டிதன் ஈச்வரனைத் தன்னுடைய ஆத்மா வைப்பார்க்கிலும் வேருகாதவனாக அன்பினால் தெரிந்து கொள்ளுகிறான். மற்றொருவன் (பக்தன்) பேதமடைந்த வனாகத் தெரிந்துகொள்கிறவனாயினும் ஈச்வரபக்தியினால் ஆத்மாவில் கலந்திருக்கிறவனாகிறான். தான் வேருக நினைத்தாலும் ஈச்வரன் ஆத்மரூபியே யல்லவா!

151. பக்தன் ஆத்மாவை கிஞ்சிஜ்ஞனாகவும் பரிச் சின்னனாகவும் எப்பொழுது நினைக்கிறானோ அப்பொழுது கிலேசங்களின் நிவிருத்திக்காக (துக்கம் நீங்குவதற்காக) லக்ஷ்யரூபமாகப் பிரபஞ்சத்தையெல்லாம் வியாபித்த உத் தமவஸ்துவை தேவதார்பக்தியுடன் சேவித்தவனாய் அந்தி யத்தில் அந்த வஸ்துவையே அடைகின்றான்.

152. தேவதைக்கு நாமரூபங்களைக் கற்பிக்கிறதினால் அந்த நாமரூபங்களினாலேயே உலகசம்புந்தமான நாம ரூபங்களை ஜயிக்கலாம்.

153. எந்த பக்தி தாரை (தொடர்பு) இல்லாததோ அது விச்சின்ன (பின்னப்பட்ட) பக்தியென்று சொல்லப் படுகின்றது. விச்சின்னபக்தி பூரணபக்திக்குக் காரண மாகும்.

154. கோரிக்கைக்காக பக்திசெய்கிறவன் கோரிக்கையை யடைந்தும் திருப்தி யடையாதவனாகி கடைசியில் நித்யசுகத்தை யடைவதற்கு மறுபடியும் ஈச்வரனை சேவிக்கிறான்.

155. பக்தி கோரிக்கைகளுடன் கூடினதாயினும் கோரிக்கைகள் சித்தித்தபிறகு திரும்பாது. ஏனெனில் பரமபுருஷனிடத்தில் விருத்தியடைந்த ச்ரத்தை அப்பொழுது மறுபடியும் விருத்தியடையும். அந்த பக்தி விருத்தியடைந்து காலத்தில் பரிபூர்ணமாகும். பூரணமான உத்தமபக்தியினால் ஞானத்தினாற்போல சம்சாரத்தைப் புருஷன் தாண்டுவான்.

156. *திரிகரணசுத்தியுடன் ஆண்டானடிமையாகச் செய்யும் நிஷ்காமபக்தியின் முடிவில் "தன்னுடைய செயல்களெல்லாந் தலைவனுடையவையாகவே முடிகின்றன" என்ற உண்மையினை யுள்ளவாறுணர்ந்து சுதந்தர (மமகார) மற்றுவிளங்குதலே பக்தி அல்லது சித்தாந்தமார்க்கத்தின் முடிவாம், சித்தாந்திகள் கூறும் 'பரபக்தி', இறைபணிநிற்றல் என்ற வாக்கியங்கட்குப் பொருளிதுவேயாம்.

157. ஞானம், பக்தி ஆகிய இவ்விருமார்க்கங்களினுமே மனோவாக்குகட் ககோசரமாய மௌனநிலை சித்திப்பதால் இவ்விருமார்க்கங்களின் முடிவொன்றே யென்பதிற் சம்சய (சந்தேக) மில்லை.

---

*திரிகரணம் = மனம், வாக்கு, காயம்.

## XV. சிரவண மனன நிதித்தியாசனம்

158. அர்த்தம் வெளியாகும்படியாக வேதாந்த வாக்கியங்களை ஆசாரியனுற் கேட்கிறதை சிரவணமென்று சிலர் செப்புவார்கள். மற்றும் சிலர் ஆத்மரூபத்தைத் தெரியப் படுத்துகிறவைகளும் தம்முடைய பாஷைகளிற் சேர்ந்தவைகளுமான வார்த்தைகளைக்கூட ஆத்மாவை யறிந்த ஆசாரியனுற் கேட்கிறதை சிரவணமென்கிறார்கள்.

159. குருவினுல் வேதாந்த வாக்கியங்களை அல்லது அவருடைய சொந்த வாக்கியங்களைக் கேட்டாவது, பூர்வ ஜன்ம புண்ணியத்தினுல் இவ்விரண்டுமல்லாத வேறுவிதமாகத் தெரிந்துகொண்டாவது 'நான்' என்கிற விருத்திக்கு மூலமாயுள்ளவன் 'நீ'. சரீரம் முதலியவற்றைப் பார்க்கிலும் விலக்ஷணமா(வேறு)னவன் என்று சித்தத்திலிருந்து உண்டான இச்சிரவணமே சிரவணமாகும்.

160. சிலர் மனனத்தை சாஸ்திரார்த்தத்தை விசாரிக்கிறதென்று சொல்லுகிறார்கள். உண்மையாக ஆத்மரூபத்தை விசாரிக்கிறதே மனனம்.

161. விபரீதமில்லாததும் சந்தேகத்திலிருந்து விலகினதுமாகிய ப்ரஹ்மமே ஆத்மஸ்வரூபமென்னும் விஞ்ஞானத்தை சிலர் நிதித்தியாசனமென்கிறார்கள்.

162. விபரீத பாவத்திலிருந்து விலகினதும் சந்தேகமில்லாததுமாயினும், முற்றிலும் சாஸ்திரத்தினுலுண்டான ஜீவேச்வர ஐக்கியஞானம் அனுபவத்திற்கு வராது. இவ்விரண்டும் (சந்தேகமும் விபரீதபாவனையும்) அனுபவத்தி

ளுலேயே நீக்கப்படுகின்றன. நூறு சாஸ்திரங்களினு லானுலும் நீங்காது.

163. சிரத்தை யுள்ளவனுக்கு சாஸ்திரத்தைப்பற்றி வேருன சந்தேகமும் விபரீதபாவனையும் உண்டாகா. ஆயினும், அந்த சிரத்தை கொஞ்சம் குறைந்தால் சந்தேகமும் விபரீதபாவனையும் மறுபடியும் விருத்தியாகும்.

164. ஆத்மரூபானுபவத்திளுலேயே அவைக (சந்தேக விபரீதங்க)ளுடைய வேருக்கு அழிவு உண்டாகும். அதனுல் ஆத்மரூபத்தில் நிற்கிறது நிதித்தியாசனமென்று சொல்லப்படுகிறது.

165. ஆத்மரூபத்தில் நிலைபெருமல் வெளியில் சஞ்சரிக்கிறவனுக்கு நூறு சாஸ்திரங்களைப் பார்த்தாலும் பிரத்தியக்ஷஞான முண்டாகாது. ஸஹஜமாகிய ஆத்மாவில் நிலையுண்டானுல் அதுதான் முத்தி. அதுவே நிலை. அதுவே ஸாக்ஷாத்கார மென்று சொல்லப்படுகின்றது.

---

## XVI. சமாதி

166. தியானத்தின் பரிபாகத்தால் மனது தியான ரூபத்திலேயே லயித்த, அல்லது 'அஹம் அஹம்' ('நான் நான்') என்று தானுகுய் ஸ்புரித்துக்கொண்டிருக்கும் அந்த அஹம்ஸ்புரிப்பும் அடங்கிய (சூக்ஷ்மமான) சாக்ஷாத்காரநிலேயே சமாதி யெனப்படும்.

167. சொப்பிரயத்தன மனேகற்பிதந் தியான மென்றும், அஃதடங்கியது சமாதியென்றுஞ் சொல்லப் படும்.

168. ஆத்மாவுக்கு விஷயங்களிலிருந்து விலகின ஞான ஜ்வாலே ரூபமாகிய சுபாவநிலே ஸஹஜ ஸ்திதி யெனப்படும். விஷயங்களே யறியும்பொழுதுகூட ஸ்திர மான ஏகாக்ரபுத்தி ஸஹஜ ஸ்திதியென்று சொல்லப்படு கின்றது. விஷயங்களே யறியாமலிருந்தால், அது கேவல நிர்விகற்ப சமாதியாகும்.

169. சர்வவியவகாரங்களு மற்றதும் சுழுப்தியைப் போன்றதுமான அவ்விஞ்ஞான நிலேயிலுள்ள சுகா (சாந்தா)னுபவமே ஆனந்தத்தின் இயல்பு. இதனேயே கேவல நிர்விகற்பசமாதி யென்று கூறுவர்.

170. வியவகாரங்களற்ற சுழுப்தியைப் போன்றுள்ள அந்நிலேயினின்றும் நனவிற் சுழுப்திஸ்திதியைப் பெற்று முன்னுள்ள ஆனந்தானுபவத்தோடும் விளங்கும் நிலேயே ஆனந்தாதீத வியல்பு. இதனேயே ஸஹஜநிர்விகற்பசமாதி யென்று கூறுவர். இந்நிலேயில் தேகேந்திரியகரணுதி

களின் சலனங்களிருந்தும் * நித்ராமக்நபாலநியாயம் போல அதில் தனக்கற்பமும் திருஷ்டி யின்மையால் இத் தகைய யோகி, சர்வவியவகாரங்களையுஞ் செய்தும் செய் யாதவனாகின்றான்.

171. கேவல நிர்விகற்பசமாதியில் மனம் சொரூ பப் பிரகாசத்தில் லயித்திருக்கிறது. சமாதி வியுத்தான வியவகாரபேதமும்; தேக திருஷ்டி பிராண மனச்சலன, விஷய தர்சன, வியவகாரத்தடையும் உண்டு. ஸஹஜ நிர் விகற்ப சமாதியில் மனம் சொரூபாகாரமாக நசித்திருத்த லான் இப்பேதத் தடைகளில்லை.

172. சிலருடைய தீர்ப்பின் பிரகாரம் சகல தேகேந் திரிய வந்தக்கரண வநுபவங்களும் அடங்கிய நிலையே முடிந்த நிலையாயின் கேவலசுழுப்தியினும் அந்நிலைக்குள்ள விசேஷம் ஒன்றுமில்லையே. அன்றியும் அது ஒருபோதி ருந்து மற்றொருபோது மாறுதலால் அதனை சுபாவநிலை யென லெங்ஙனம் பொருந்தும்? அது சிலருக்கு மேற்கூறிய வாறு பிராரப்தவசத்தாற் சிலகாலம் வரையுமோ தேகாந் தம் வரையுமோ வாய்க்கிறதே யல்லாமல் அதுதான் முடிந்தநிலையெனக் கொள்வதற்கில்லை. அங்ஙனங் கொள்வ தாயின், இதுகாறும் ஏற்பட்டுள்ள எண்ணிறந்த ஞான சாஸ்திரங்கட்கும் வேதங்கட்கும் ஆசிரியர்களாகவுள்ள பெரியோர்களும் ஈச்வரனும் அஞ்ஞானிக ளென்றன்றோ

* உறங்கும் பாலர்கள் செய்யும் அருந்தலாதிய வியவகாரங் கள் பிறர் திருஷ்டியிலுள்ளனவே யன்றி அப்பாலர்களது திருஷ்டியி லின்மையால் அப்பாலர்கள் அவ்வியவகாரங்களைச் செய்துஞ் செய்திலராம்.

பொருள்படும்? சர்வ தேகேந்திரிய வந்தக்கரணங்களும் அற்றவிடத்துத்தான் உள்ளதென்ற சொரூபநிலை, அவைக ளுள்ளவிடத்தில் இல்லாமலிருக்கிறதா? ஸஹஜ நிர்விகற்ப நிலையையே முடிவாகப் பெரியோர் கூறுகின்றனர். ஆகவே ஞானிகளுடைய பிரவிருத்திக்கும் நிவிருத்திக்கும் பிராரப்தமே காரணமென்க.

173. கேவல சுழுப்தி நிலைக்கும் *ஜாக்கிர சுழுப்தி (ஸஹஜநிர்விகற்பசமாதி) நிலைக்கும் அனுபவத்திலுள்ள பேதம் யாதெனில், கேவல சுழுப்தி நிலையில் நினைவுகளே யன்றி நனவு (ஔப்தியு) மில்லை; ஜாக்ர சுழுப்தியில் நனவு மாத்திரமுண்டு. அதனால் தான் ஜாக்கிர சுழுப்தி நனவிற் சுழுப்தி (நனவுள்ள சுழுப்தி) யென்று சொல்லப்படுகிறது.



* ஜாக்கிர (நனவிற்) சுழுப்தி நிலையைத் தூங்காமல் தூங்கு தலென்றும் சொல்வதுண்டு=Superconscious state.

## XVII. முத்திபேதங்கள்

174. பந்தத்திலிருக்கும் தான் யாரென்று விசாரித்து தன் யதார்த்த சொரூபத்தைத் தெரிந்துகொள்வதே முத்தி.

175. நெடுங்காலத்தியானத்தால் சூக்ஷ்மமும் நிச்சலமுமான மனதிற்கே ஆத்மானுபவம் கூடும். இவ்வித சூக்ஷ்ம மனதோடு, சாஸ்திர சம்பந்தமானவைகளும் உலக சம்பந்தமானவைகளுமான வாசனைகளால் அசைக்கப் படாத மிகவும் திடமான ஆத்மரூபத்தில் நிலையே ஜீவன் முத்தி என்று சொல்லப்படுகிறது. இந்த ஜீவன்முத்தி ஸ்திதியே நிர்க்குண ப்ரஹ்மமென்றும் துரியமென்றும் சொல்லப்படும்.

176. தேகம் நானல்ல, ஆத்ம சொரூபமாக விளங்கும் ப்ரஹ்மமே நான் என்னும் திடநிச்சயமுள்ளவனே (உணர்ச்சி யுள்ளவனே) ஜீவன்முக்த னானாலும், மனோலயமில்லாத வரையில் பிராரப்தவசத்தால் தோன்றும் த்ருஷ்டவிஷயங்களில் ஏகதேசம் துக்கம் தோன்றவும் கூடும்.

177. தியானத்தால் சூக்ஷ்மமாக்கப்பட்ட இந்த மனதும் லயித்து சொரூபாநுபவமுமின்றி ஆனந்தக்கடலில் மூழ்கி ஒன்றுந்தோன்றாமல் அம்மயமாயிருப்பவனே விதேகமுக்த னெனப்படுகிறான். இவ்விதேகமுக்தி ஸ்திதியே நிர்க்குணாதீதப்ரஹ்மமென்றும் துரியாதீதமென்றும் சொல்லப்படுகிறது. இதுவே முடிவு.

178. எவ்வனே, ப்ரஹ்மலோகத்தைச் சேர்ந்து முத்தியடைந்தவனாக சாஸ்திரங்கள் முறையிடுகின்றனவோ அவ

னுக்கும் ஜீவன்முத்தனுக்கும் ஆத்மானுபவத்தில் பேத மில்லை.

179. ஆத்மஸ்திதனான எம்மகாத்மா சரீரமிருக்கும் போதே முத்தியடைகின்றானோ அவனுக்கு மாத்திரம் இவ் வுலகத்திலேயே பிராணன்கள் ஆத்மாவில் லயமாகின்றன. அம்மகாத்மாவின் முத்தியனுபவமும் இவ்விருவருடைய (ஜீவன்முத்தன், ப்ரஹ்மலோகத்தைச் சேர்ந்து முத்தி யடைந்தவன்) அனுபவத்தைப்போலிருக்கும். ஏனெனில் ஆத்மரூபத்தில் நிலை சமமானதினாலும் பந்தத்திலிருந்து விலகுவது சமமானதினாலும் முத்தி ஒருவிதமாகவேயிருக் கும். இதில் வித்தியாசம் பேதபுத்தியுள்ளவனுக்கு மாத் திரம் தோன்றும்.

180. காலம் செல்லச் செல்ல, தவத்தின் பரிபாகத்தி னால் ரூபமிருந்தும் ஜீவன்முத்தனுக்கு ஸ்பரிசம் அல்லது தொடுதல் இல்லாமை சித்திக்கும். மேலும் ஆத்மானுபவ ரூப தவப்பரிபாகத்தினால் ரூபத்தின் இல்லாமையும் சித் திக்கின்றது. அப்படிப்பட்ட சித்தன் கேவல ஞானரூபனா யிருப்பான்.

181. தேவானுக்கிரகத்தினால், தேகத்தை ஆசிர யித்த இரண்டு ஸித்திகளும் (ஸ்பரிசமும் ரூபமும் இல் லாமை) அற்பகாலத்திலேயே உண்டாகும். ஆனால் இந்த பேதத்தை யனுசரித்து ஆத்மானுபவ சம்பத்தில் ஏற்றமும் குறைவும் உண்டாகாது. சரீரமுள்ளவனாயினும் இல்லாத வனாயினும் ஆத்மாவில் நிலைபெற்றவன் முத்தனாகின்றான்.

182. துக்கசுக தாரதம்மியத்தால் ப்ரஹ்ம வித்து, வரன், வரீயான், வரிஷ்டன் என நான்குவகையாகக்

கூறும் ஜீவன்முத்த விதேகமுத்த பேதங்கள் பார்க்கும் பரதிருஷ்டியைப் பற்றியனவன்றி ஞானமுத்திபேதம் உண்மையிலில்லை.

183. ஸுஷும்ந நாடியிலிருந்து அர்ச்சிராதி மார்க்கமாய் ஊர்த்வகதிபடைந்த புருஷன் அவ்விடத்தி லுண்டான ஞானத்தினால் முத்தியடைந்தவனாகின்றான்.

184. மிகவும் பரிபாகமடைந்த சித்தமுள்ள உபாஸகனாகிய யோகிக்கு ஈச்வரானுக்கிரகத்தினால் ஸுஷும்ந நாடி மூலமாய் உத்தமமான கதி உண்டாகிறது. இவனுக்கு எல்லா உலகங்களிலும் தன்னிஷ்டப்பிரகாரம் திரியவும், தன்னிச்சைப்படி சரீரங்களைக் கொள்ளவும், உலகத்தை அனுக்கிரகிக்கவும் வல்லமையுண்டாகும்.

185. வித்வான்களிற் சிலர் முத்தர் வசிக்கும் உலகத்தைக் கைலாசமென்றும், சிலர் வைகுண்டமென்றும், சிலர் சூரியமண்டலமென்றும் சொல்லுகிறார்கள். ஆனால், பூமி முதலிய உலகங்களைப்போல் அந்த முத்தலோகங்கள் ஸகலமும் ஆத்மாவின் ஆச்சரியமானதும் விசித்திரமானதுமான வைபவமுள்ள சக்தியினால் ஆத்ம ரூபத்திலேயே கற்பனை செய்யப்படுகின்றன.

———

## XVIII. ஆசிரமங்கள்.

186. ஆசிரமங்களுடைய கிரமம் படிகளைப்போலப் பரஸ்வரூபத்தை அதாவது ஆத்மரூபத்தை யடைவதற்கு ஆதாரமாகின்றது. மிகவும் பரிபக்குவமான சித்தமுடையோர் ஆசிரமக்கிரமத்தை அனுசரிக்கிறது அனுவசியம்.

187. உலகத்தில் செய்யத்தக்க காரியங்களுக்கு ஆசிரமங்களின் கிரமம் ஆதாரமாகும். ப்ரஹ்மசர்ய, கிருஹஸ்த, வானப்பிரஸ்தமென்கிற இம்மூன்று ஆசிரமங்களின் தருமங்கள் ஆத்மஞானத்திற்கு அனுகூலமானவைகளே யன்றிப் பிரதிகூலமானவையல்ல.

188. ப்ரஹ்மசர்ய ஆசிரமத்தில் எவனுக்கு விரதங்களினுலும், படிப்பினுலும் (வித்தையினுலும்), ஞானபிவிருத்தியினுலும் சக்தி அதிகமாகின்றதோ அவன் பின் ஆசிரமங்களில் மிகவும் பிரகாசிப்பான். (அதாவது பரிசுத்தமான ப்ரஹ்மசர்யத்தினுல் ஒருவன் கிருஹஸ்தாசிரமத்தில் நிர்மலனுவான்.)

189. கிருஹஸ்தாசிரமம் முக்கியமாய் உலகத்தின் உபகாரத்திற்கு ஆதாரமாகின்றது.

190. தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாததுபோல் சம்சார சுகதுக்கங்களில் ஒட்டாமலிருக்கின்ற கிருஹஸ்த புருஷனிடத்தில் ஆத்மப் பிரகாசம் மிகவும் பிரகாசிக்கின்றது. இதில் சந்தேகமில்லை.

191. கிருஹஸ்தாசிரமத்தை நடத்துவதற்கு வேண்டியவளவு உலககாரியங்களில் மனதைப் பிரவிருத்திப்பித்து

மற்றைக் காலங்களில் யாதொரு நினைவிற்குஞ் சிறிதுமிடந் தராது நானாரென்னும் விசாரணையை இடைவிடாது எந்த கிருஹஸ்த புருஷன் செய்துவருகின்றானோ அவனுக்குக் காலக்கிரமத்திற் பற்றற்ற தன்மை சித்திக்கும்.

192. மூன்றாவதாகிய வானப்பிரஸ்தாசிரமம் தவத்திற்கு ஆதாரமென்று அறிஞர்கள் சொல்வார்கள். மனைவியுடன் கூடியாவது, கூடாமலாவது மூன்றும் ஆசிரமத்தைக்கொள்ளலாம்.

193. பரிசுத்தஞானம் சந்நியாச மாகுமே தவிர காவிவஸ்திரங்களைத் தரிப்பதும், முண்டனமும் சந்நியாச மாகாது. சில விடையூறுகளை நீக்கிக்கொள்ளும்பொருட்டு ஆசிரம ஸ்வீகார மேற்பட்டது.

194. தவத்தினாற் பாவங்களைப் போக்கடித்துக் கொண்டவனும் நன்றாகப் பழுத்த சித்தமுடையவனுமாகிய யோகிக்கு நான்காம் ஆசிரமம் (சந்நியாசம்) காலத்தில் தானாகவே யுண்டாகிறது.

195. சந்நியாச மென்பது நானென்னும் சங்கற்ப த்யாகமே யன்றி வெளிவிஷயங்களை விடுவதல்ல. ஆதலின் இந்த சந்நியாசமுள்ளவனுக்கு ஏகாந்தத்திலிருந்தாலும் அபார சம்சாரத்திலிருந்தாலும் சமமாகவே தோன்றும்.

---

## XIX. சுகம்

196. சுகமென்பது ஆத்மாவின் சொரூபமே; சுகமும் ஆத்மசொரூபமும் வேறல்ல. ஆத்மசுகம் ஒன்றேயுள்ளது; அதுவே ஸத்யம். பிரபஞ்சப்பொருள் ஒன்றிலாவது சுகமென்பது கிடையாது. அவைகளிலிருந்து சுகம் கிடைப்பதாக நாம் நமது அவிவேகத்தால் நினைக்கின்றோம்.

197. மனம் வெளியில் வரும்போது துக்கத்தையனுபவிக்கிறது. உண்மையில் நமது எண்ணங்கள் பூர்த்தியாகும்போதெல்லாம் அது தன்னுடைய யதாஸ்தானத்திற்குத் திரும்பி ஆத்மசுகத்தையே யனுபவிக்கிறது. அப்படியே, தூக்கம் சமாதி மூர்ச்சை காலங்களிலும், இச்சித்த பொருள் கிடைக்கிறபோதும், வெறுத்த பொருளுக்குக் கேடுண்டாகும்போதும் மனம் அந்தர்முகமாகி ஆத்மசுகத்தையே யனுபவிக்கிறது. இப்படி மனம் ஆத்மாவை விட்டு வெளியே போவதும், உள்ளே திரும்புவதுமாக ஓய்வின்றி யலைகிறது.

198. மரத்தடியில் நிழல் சுகமாயிருக்கிறது. வெளியில் சூரியவெப்பம் கொடுமையாயிருக்கிறது. வெளியிலலையு மொருவன் நிழலிற் சென்று குளிர்ச்சி யடைகிறான். சிறிது நேரத்திற்குப்பின் வெளிக்கிளம்பி வெப்பத்தின் கொடுமைக்காற்றாது, மறுபடியும் மரத்தடிக்கு வருகின்றான். இவ்வாறு நிழலினின்று வெயிலிற்போவதும்,வெயிலினின்று நிழலிற் செல்வதுமாயிருக்கிறான். இப்படிச் செய்கிறவன் அவிவேகி. ஆனால் விவேகியோ நிழலைவிட்டு நீங்கான். அப்படியே ஞானியின் மனமும் ப்ரஹ்மத்தைவிட்டு

நீங்குவதில்லை. ஆனால் அஞ்ஞானியின் மனமோ பிரபஞ்சத்தி லுழன்று துக்கப்படுவதும், சிறிது நேரம் ப்ரஹ்மத்திற்குத் திரும்பி சுகமடைவதுமா யிருக்கிறது.

199. ஜகமென்பது நினைவே. ஜகம் மறையும்போது அதாவது நினைவற்றபோது மனம் ஆனந்தத்தை யனுபவிக்கிறது; ஜகம் தோன்றும்போது துக்கத்தை யனுபவிக்கின்றது.

---

## XX. சக்தி.

200. விஷயி (அகங்காரி) விஷயம் (ரூபாதிகம்) விருத்தி (அவ்விரண்டின் சம்பந்தத்தினுலுண்டாகும் வியாபாரம்) என்கிற இப்பேதங்கள் எவ்விடத்தில் முப்புரிகொண்டிருக்குமோ அந்த ஸ்வரூபத்தை வேதாந்த வேதிகள் ஸர்வசக்தி யுடையதாகச் சொல்லுகிறுர்கள்.

201. வேதாந்தவேதிகள் எதை ஈச்வரனுடைய சக்தியாகத் துதிக்கிறுர்களோ அச்சக்தியின் சலனத்தினுல் (அசைவினுல்) உலகங்கள் உண்டாகின்றன. ஆனுல் அசைவுக்கு ஆதாரமானவஸ்து ஒருபொழுதும் அசையாமலிருக்கிறது.

202. அசையாதவஸ்து சம்பந்தமான சக்தியின் எந்த அசைவு உலகமுண்டாகிறதற்குக் காரணமென்கிறுர்களோ அதையே விவரிக்க முடியாத மாயையென்று வித்வான்கள் கூறுகிறுர்கள்.

203. சலனம் விஷயியாகிய அஹங்காரிக்கு உண்மைபோலத்தோன்றும். ஆத்மாவுக்குச் சலனம் உண்மையாயில்லை. தனதாகிய உத்தமமான சக்தியினுல் அசைகின்றவனுயினும், பிரகிருதியை மீறின அவன் (ஆத்மா) அசையாமலிருக்கிறுன், கேவலம் ரிஷி (ஞானி)களால் அறியத்தக்க உத்தமமான ரகசியமிது.

204. ஈச்வரனுக்கும் (ஆத்மாவுக்கும்) சக்திக்கும் பேதம் திருஷ்டி (பார்வை)யினுல் உண்டாயிற்று. பார்வையை உட்புறம் திருப்புவோமாகில் இவ்விரண்டும் ஒன்றேயென்று காண்போம்

205. சலனமே வியாபாரம். வியாபாரமே சக்தியென்று சொல்லப்படுகின்றது. சக்தியினால் பரமபுருஷன் காணப்படும் இப்பிரபஞ்சத்தை உண்டாக்கினர்.

206. வியாபாரம் பிரவிருத்தியென்றும் நிவிருத்தியென்றும் இரண்டு விதங்களாயிருக்கிறது. "யத்ர ஸர்வ மாத்மைவாபூத்" (எங்கேயெல்லாம் ஆத்மாவே ஆனதோ) என்னும் சுருதி (வேதம்) நிவிருத்திபரமாயிருக்கிறது. 'ஸர்வம்' (எல்லாம்) என்கிறதினால் துவைத சங்கேத ஸமய (கால) ஸித்தமான நானாத்வம் (பலவகை) தோன்றுகிறது. இங்கு 'அபூத்' (ஆனது) என்னும் பதத்தினால் இந்தப் பிரபஞ்சத்தின் வியாபாரமொன்று தோன்றுகிறது. 'ஆத்மைவ' (ஆத்மாவே) என்று நிரூபிக்கிறதினால் அவ்வாத்மாவிற் பிறந்த விசேஷங்களெல்லாவற்றிற்கும் அவ்வாத்மாவிலேயே லயம் (முடிவு) சொல்லப்பட்டது.

207. சக்தியின்றி ஸ்வரூபம் பிரகாசிக்காது. வியாபாரம் ஆசிரயம் என்று சக்தி இரண்டு பெயர்களுடையதாகச் சொல்லப்படுகிறது. பிரபஞ்சத்தின் சிருஷ்டி முதலிய காரியத்தை வியாபாரமென்று சொல்லுகிறார்கள். ஸ்வரூபமே ஆசிரயம்.

208. ஸ்வரூபமானதினால் ஆத்மரூபம் மற்ற வஸ்துக்களின் அபேக்ஷையோடு கூடினதல்ல. இவ்விதமாக சக்தியை ஆசிரயமாகவும், வியாபாரமாகவுங்கூட எவன் தெரிந்துகொள்கிறானோ அவனே யறிந்தவன்.

209. விருத்தியில்லாத காலத்தில் ஸத்துக்கு நானாத்வம் (அநேக விதமாதல்) சித்திக்காது. ஸத்து சக்தியை மீறினால் விருத்திக்கு (வியாபாரத்திற்கு) ப்பிறப்பேயில்லை.

210. காலக்கிரமத்தை யனுசரித்து உலகத்துக்குப் பெரிய பிரளயம் (அழிவு) உண்டாகில், வியாபாரம், ஆத்மாவில் பேதமில்லாமல் லயித்ததுபோலிருக்கும்.

211. சக்தியில்லாமல் ஒரு வியாபாரமும் உண்டாகாது. சிருஷ்டியுமில்லை. எந்த அறிவு முப்புரிகொண்டிருக்குமோ அந்த (திரிபுடி) ஞானமும் உண்டாகாது.

212. பராத்பரமான (எல்லாவற்றையும் மீறின) சக்தி ஆசிரயமாக இருந்து ஸ்வரூபமென்றும், சிருஷ்டி கர்மத்தால் வியாபாரமென்றும் இரண்டு பெயர்களால் விவரிக்கப்படுகின்றது. எவர்களுக்கு சக்தியின் லக்ஷணம் சலனமோ அவர்களுக்கு அந்தச் சலன சக்திக்கு ஆசிரயமாக ஏதாவது ஒரு விலக்ஷணமான வஸ்துவிருக்கிறதென்று சொல்லவேண்டி யிருக்கிறது.

213. ஸ்வரூபமான அந்த வுத்தமமான ஒரு வஸ்துவை சிலர் சக்தி யென்றும், சிலர் ஆத்மரூப மென்றும் சொல்லுகிறார்கள். சில வித்வான்கள் ப்ரஹ்மமென்றும் வேறு சிலர் புருஷனென்றும் அழைக்கிறார்கள்.

214. லக்ஷணத்தினாலும் வஸ்து ரூபத்தினாலும் இரண்டு விதங்களாக ஸத்யம் (ஆத்மா) அடையத்தகுந்ததாயிருக்கிறது. ஸத்தியத்தை லக்ஷணத்தினால் வழங்கு (உரைக்)கிறார்கள். வஸ்து ரூபத்தினால் அநுபவிக்கிறார்கள். அதனால் ஸ்வரூப விஞ்ஞானத்தை (ஆத்மரூபத்தை யறிகிறதை) வியாபாரத்தினாலும் வஸ்து ரூபத்தினாலும் (அதாவது தடஸ்த பாவத்தினாலும் பிரத்தியக்ஷபாவத்தினாலும்) இரண்டு விதங்களாகச் சொல்லுகிறார்கள். (ஆத்மாவின் வியாபாரத்தைத் தடஸ்தபாவத்தினாலும், ஆத்மாவின் வஸ்துரூபத்தைப் பிரத்தியக்ஷமாயும் காணவேண்டும்.)

215. ஸ்வரூபத்தை ஆசிரயமாயும், வியாபாரத்தை லக்ஷணமாயும் சொல்வார்கள். வியாபாரத்தினுல் (விருத்தியினுல்) அதன்மூலம் ஆசிரயமென்று அறிந்துகொண்டு ஆசிரயமான ஆத்மாவில் ஞானி நிலைபெறுகின்ருன். ஸ்வரூபம் லக்ஷணத்தோடு கூடியது. லக்ஷணமும் ஸ்வரூபமுடையது. இவ்விரண்டிற்கும் தாதாத்மிய (ஒற்றுமை) சம்பந்தமிருக்கிறது.

216. வியாபாரமென்னும் பெயருள்ள தடஸ்த லக்ஷணத்தால் ஆத்மா நிரூபிக்கப்பட்டதனுல் ஆத்மாவுக்கு வியாபாரம் நித்தியமென்று ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியாது. ஆனுல் வியாபாரம் வஸ்துவை விட அன்னியமன்று ; இதைத் தத்துவத்தினுல் தெரிந்துகொள்வாயாகில் இந்த பேதஞானமெல்லாம் கற்பனையினுல் உண்டானதென்று தோன்றும்.

217. சக்திவிலாச மென்னும் பெயருள்ள அந்த சிருஷ்டி ஈச்வரனுடைய காரியமாகும். அந்தக் காரியத்தைத் தாண்டினுல் ஆத்மரூபம் மிகுதியாக நிற்கும்.

218. ஜீவன் சுபாவத்தில் ஆத்மாவாகவே யிருந்தும் அங்ஙனமாய் தனது சுபாவ நிலையினை அறியவொட்டாமல் மறைப்பதெதுவோ அதுவே ஆவரண சக்தியாம்.

219. ஆவரணசக்தி ஜீவனை முற்றும் மறைத்துவிடுவதில்லை. நான் ஆத்மா வென்கிற ஸ்வபாவத்தை மாத்திரம் மறைத்து தேகமெனத் தோன்றுவிக்கிறதேயன்றி ஸத்தாகவும் நித்தியமாகவுமுள்ள 'நான்' என்ற தனது இருப்பையே தனக்குத் தெரியவொட்டாமல் மறைப்பதில்லை.

---

## XXI. சங்கம். (Society)

220. அந்தந்த ஆசாரங்களை யனுசரிக்கிறவர்களுக்கு சங்கம் சரீரத்தைப் போன்றதென்று அறியவேண்டும். சங்கத்தார் சங்கத்திற்கு அவயவங்களைப் போன்றவர் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

221. சரீரத்திற்கு அங்கம் உபயோகப்படுவது போல் சங்கத்திற்கு உபகாரஞ்செய்யும் சங்கத்தான் ஜய மடைவான். ஆதலால் மனோவாக்குக்காயங்களால் தான் உதவிசெய்வதோடு தன்னைச்சேர்ந்த மற்றவர்களையும் சங் கத்திற்கு உதவி செய்யும்படி தூண்டிக்கொண்டிருக்க வேண்டும்.

222. தன்னுடைய குலத்தை சங்கத்திற்கு அனு கூலமாயிருக்கச்செய்து சங்கத்தின் மேன்மைக்காக குலத் தை சம்பத்துள்ளதாகச் செய்யவேண்டும்.

223. தன்னுடைய மனச் சுத்தத்திற்காக சாந்தி யும், சங்கத்தின் விருத்திக்காக சக்தியும் உபயோகப்படு கின்றன. சக்தியால் சங்கத்தைப் பெரியதாகச் செய்து பிறகு சாந்தியை ஸ்தாபிக்கவேண்டும்.

224. சங்கத்திற் சேர்ந்த சர்வ மனிதர்களின் கூட் டத்திற்கு ஸமபாவம் (எல்லாவற்றையும் ஒரே விதமாகப் பார்க்கும் ஸ்வபாவம்) உண்டாகி சகோதரர்களைப்போ லிருப்பதே அடையத்தக்க உத்தமமான பலனென்று சொல்லப்படுகின்றது. தமக்குள் தாம் சகோதரர்களைப் போல் நடந்துகொள்வதினால் எல்லா மனிதர்களுககும் சாந்தியுண்டாகும். அப்பொழுது இந்த பூமியெல்லாம் ஒரு வீட்டைப்போல் பிரகாசிககும்.

## XXII. ஸத்ஸஹவாசம்.

225. ஸத் ஸஹவாசத்தால் புறப்பற்றொழிந்து அதனால் அகப்பற்றும் அழியும்; அவ்வகப்பற்றழிந்தோர் ஆத்ம நிஷ்டையுற்று ஜீவன்முத்தியும் பெற்றோராவர். ஆதலால் ஸத் ஸஹவாசம் பண்ணவேண்டும்.

226 ஸத் ஸஹவாசத்தால், சித்தசுத்தியுண்டாய் அச்சித்தத்தின் கண்ணெழுந்த தெளிந்த விசாரத்தால் எந்தப் பரமபத மடையப்படுமோ அது சாஸ்திரம், புண்ணியம் முதலிய மற்றெந்த சாதகத்திலாவது சாரப்படாது.

227. குளிர்ந்த தென்றற்காற்று வீசும்பொழுது ஒருவன் விசிறிகொண்டு வீசிக்கொள்வது எங்ஙனம் பிரயோசனமற்ற செய்கையோ அங்ஙனமே ஸத் சங்கத்தை யடைந்தார்க்கு இந்நியமங்கள் [அதாவது நாமஸங்கீர்த்தனை, தீர்த்தயாத்திரை, தான தர்ம முதலியன] பயனற்றவைகளாம்.

228. சந்திரனால் தணிகின்ற தாபம், கற்பகத்தால் ஒழிகின்ற தரித்திரம், கங்கையால் தொலைகின்ற பாவமாகிய மூன்றும் சாதுக் (ஜீவன்முக்தர்)களுடைய திவ்ய தரிசன மாத்திரத்தாலே நீங்குமெனின் ஸத் ஸஹவாசத்தினும் சிறந்தது வேறுளதோ? [வேறில்லை என்றபடி]

229. புண்ணிய தீர்த்தங்களும் விக்ரஹாராதனைகளும் காலக்கிரமத்தில் தான் மனத்தூய்மை விளைவிக்குமாதலால், கண்ட மாத்திரத்தாலேயே தூய்மையை யளிக்கும் ஸத் ஸஹவாசத்திற்கு இவைகள் இணையாகா.

230. ஆத்மாவினால் நிரப்பப்பட்ட சித்தமுள்ள ஸத் புருஷர்களாகிய மஹாத்மாக்களுடன் ஒருவன் சகவாசஞ் செய்வானாகில் மனம் ஆத்மாவின் நிலையில் ஐக்கியம் (ஒற்றுமை) பெற்றவனாவான்.

## XXIII. சாஸ்திர ஞானம்.

231. எந்நூலிலும் முத்தியடைவதற்கு மனதை யடக்கவேண்டுமென்று சொல்லப்பட்டுள்ளபடியால் மனோ நிக்ரகமே நூல்களின் முடிவான கருத்து என்றறிந்து கொண்டபின்பு நூல்களை யளவின்றிப் படிப்பதாற் பயனில்லை. ஏனெனில் அற்பமதி வாய்ந்த மாந்தர்க்கு மக்கள் மனைவி முதலானவர்கள் ஒரு குடும்பமாவதுபோல மிக்க சாஸ்திர வுணர்ச்சிமட்டு முடையவர்கள் மனத்தில் பல நூறு நூறு குடும்பங்களுள்ளதால் யோகத்திற்கு அவைகள் தடையாகும்.

232. மனதை யடக்குவதற்குத் தன்னை யாரென்று விசாரிக்கவேண்டுமே யல்லாது எப்படி நூல்களில் விசாரிப்பது ? தன்னைத் தன்னுடைய ஞானக்கண்ணாற்றானேயறிய வேண்டும். ராமன் தன்னை ராமனென்றறியக் கண்ணாடி வேண்டுமா ? தான் பஞ்சகோசங்களுக் குள்ளிருப்பது ; நூல்களோ அவற்றிற்கு வெளியிலிருப்பவை. ஆகையால் பஞ்சகோசங்களையும் நீக்கி விசாரிக்கவேண்டிய தன்னை நூல்களில் விசாரிப்பது வீணே.

233. குப்பையைக் கூட்டித் தள்ளவேண்டிய ஒருவன் அதை யாராய்வதா லெப்படிப் பயனில்லையோ அப்படியே தன்னை யறிய வேண்டிய ஒருவன் தன்னை மறைத்துக்கொண்டிருக்கும் தத்வங்களனைத்தையும் சேர்த்துத் தள்ளிவிடாமல் அவை இத்தனையென்று கணக்கிடுவதாலும், அவற்றின் குணங்களை யாராய்வதாலும் பயனில்லை.

234. பல சாஸ்திரங்கள் கற்றுணர்ந்த தான் பிறந்த தெவ்விடத்திலிருந்தென்று அந்தர்முக திருஷ்டியால்உள்ள

படி விசாரித்தறிந்து இக்கர்மபாசத்தைத் தொலைக்கமுடியாதவர்கள் பன்னூல் பயின்றதாலாய பயனென்ன? இவர்கள் கேட்டதைத் திருப்பிச் சொல்லும் சத்தங்கொளெந்திரத்திற் (Gramophone) கு ஒப்பாவர்.

235. நூல்கள் பல கற்றும் மனமடங்காதவர்களை விடக் கல்லாதவர்களே உய்ந்தவர்கள். ஏனெனில் அவர்கள் மதப்பேயின் வாய்ப்படல், புகழ்ச்சியை விரும்பி மனம் வாக்குக்காயமென்னும் திரிகரணங்களாலும் ஒருங்கு கஷ்டப்படல் ஒன்றையுமடைந்திலர்.

———

# XXIV. நானுவகை

(கர்ம யோகம்)

236. கர்த்தனுகிய ஈசனது ஆணையால் கர்மம் பயன் தருதலால் கர்மம் கடவுளாகாது; அது ஜடமாகும்.

237. பலனைக் கருதிச்செய்யும் கர்மக் கூட்டத்தின் விளைவு அதன் பலனைக் காலத்தில் ஈந்து பின்பு வாசனை மயமாய் மிஞ்சி கர்மமஹாசமுத்திரத்தில் வீழ்த்து மாதலால் காமிய கர்மம் மோக்ஷத்தை யளிக்காது.

238. ஆனுல் ஈசனுக்கு அர்ப்பணமாகச் செய்யப் படும் நிஷ்காமியகர்மம் சித்தசுத்தியை உண்டாக்கி முத்திக்கு சாதனமாகின்றது.

(ஜாக்ர சொப்பனம்)

239. ஜாக்ரம் தீர்க்கம், சொப்பனம் க்ஷணிக மென்பது தவிர வேறு பேதமில்லை. ஜாக்ரத்தில் நடக்கும் விவகாரங்களெல்லாம் எவ்வளவு உண்மையாகத் தோன்றுகின்றனவோ அவ்வளவு உண்மையாகவே சொப்பனததில் நடக்கும் விவகாரங்களும் அக்காலத்திற் றோன்றுகின்றன. சொப்பனத்தில் மனம் வேருெரு தேகத்தை யெடுத்துக் கொள்ளுகிறது. ஜாக்ரம் சொப்பன மிரண்டிலும் நினைவுகளும் நாம ரூபங்களும் ஏககாலத்தில் நிகழ்கின்றன.

(ஆகாசங்கள் மூன்று)

240. பூதாகாசம், மனுகாசம், சிதாகாச மென ஆகாசங்கள் மூன்றுவகைப்படும். பூதாகாசமாவது பூதங்களெல்லாவற்றிற்கும் இடங்கொடுப்பது. மனுகாசம் அல்

லது சித்தாகாச மென்பது பூதங்களெல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துள்ள பூதாகாசத்திற்கு இடங்கொடுப்பது. சிதாகாசம் அல்லது சிதம்பரம் மேற்சொன்ன மனாகாசத்திற்கு இடங்கொடுப்பது. அதாவது உதித்திருந்தொடுங்குமிடமாயிருத்தலாம்.

(புகழ்ச்சி)

241. உலகெல்லாம் துரும்பாயினும், மறைக(ரகசியங்க)ளெல்லாம் கைக்குளடங்கு மாற்றல் வாய்ந்தாலும் புகழ்ச்சியாகின்ற வேசியை யடைந்தவர்கள் (அதாவது புகழ்ச்சியை விரும்பினவர்கள்) தங்கள் அடிமைத்தனத்தை யகற்றல் அரிது.

242. தான் பிறரென்று நினையாமல் தன்னிலைபினின்று சிறிதும் நழுவாமல் உறுதியாய்த் தானாக நின்றிடவே, தன்னையன்றி உலகில் வேறு யாருமில்லை. ஆதலின் தன்னை யார் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் அது தானே தன்னை வாழ்த்துவதையும் தாழ்த்துவதையுமே ஒக்கும்.

(சரணாகதி)

243. ஆத்மசிந்தனையைத் தவிர வேறு சிந்தனைக்குச் சற்றுமிடங்கொடாமல் ஆத்மநிஷ்டாபரனாயிருப்பதே தன்னை ஈசனுக் களிப்பதாம்.

(சீடன் லக்ஷணம்)

244. சர்வதுக்க நிவிருத்தி, பரமாநந்த ப்ராப்திகளிலளவற்ற விருப்பும்; மற்றெவ்வகைப் பேற்றினு மத்தியந்த வெறுப்பும் உடைமையே சற்சிஷ்யன் இயல்பாம்.

[விவேக லக்ஷணம்]

245. ஓர்கா லுண்மை யுணர்ந்தபின் வேறொன்றி லும் பிரமை கொள்ளா திருத்தலே விவேக வியல்பாம்.

[ஏகாந்த வாசம்]

246. ஆத்மா சர்வவியாபக வஸ்துவாதலின், ஏகாந்த வாசமென் றதற்கோர் தனியிடமில்லை. விருத்தி சூனிய நிலையே ஏகாந்தவாச மெனப்படும்.

[நிர்க்குண பூசை]

247. அஹம் ப்ரஹ்ம பாவனையை எப்போதும் விடாதிருக்கவேண்டு மென்பதே நிர்க்குண பூஜையின் தாற்பரியம்.

(சித்தர்களின் மகிமை)

248. சித்தர்களின் மகிமையை ஊகிக்க முடியாது: சிவனுக்குச் சமானர்களும் சிவரூபிகளுமாய், வரங்களைத் தருகிறதற்குக்கூட சாமர்த்தியமுள்ளவர்களாய் அவர்கள் இருக்கிறார்கள்.

(பலவகை)

249. சகல ஜீவர்களும் துக்கமென்பதின்றி எப் போதும் சுகமாயிருக்க விரும்புவதாலும், யாவருக்கும் தன்னிடத்திலேயே பரமப்பிரிய மிருப்பதாலும், பிரியத் திற்கு சுகமே காரணமாதலாலும், மனமற்ற நித்திரையில் தினமனுபவிக்கும் தன் சுபாவமான அச்சுகத்தை யடை யத் தன்னைத்தா னறிதல்வேண்டும்.

250. தேகோகமறிவை அதாவது தேகமே நானென் னும் பாவத்தை (ஹ்ருதய கிரந்தியை) ஆத்மாவாகக்

சொல்வ தாயின் ஆத்மா பலவே. ஆனால் அவ்வறிவு நசிக்குமிடமே ஆத்மாவாதலின், அங்கிரண்டாவது பதார்த்த மணுவுமின்மையால் ஆத்மா வொன்றே யென்று கூறப்படுகிறது.

251. தேக வான்மாக்களுக்கு இடையே முளைத்த அவ்வகங்காரமானது, தன் னெதார்த்த சொரூபத்தில் அடங்கி யுருவழியின் பிறகு அதனை யாச்ரயித்திருந்த பிராரப்தமாத்திரம் உயிர்த்திருத்தல் எங்ஙனம்? ஆகவே நானற்ற விடத்துப் பிராரப்தமில்லை யென்க.

252. தானெழுந்தால் சகலமு மெழும்; தானடங்கினால் சகலமு மடங்கும். [இங்கு தானென்பதற்கு தேகத்தைப் பொருளாகக் கொள்ளலாகாது. ஆனால் சுஷுப்தியினின்றும் நானென்ற ஞானத்துடன் ஆத்ம சொருபத்திலிருந்து வெளிப்படும் அந்த சக்தியாகிய மனதையே தானென்பதற்குப் பொருளாகக் கொள்ளவேண்டும்.]

253. பந்த முத்திகள் கேவலம் புடைபெயர்ச்சிகளேயாம். அவை தமக்கெனவோர் சொருபமுடையனவாகா: தனது சுபாவநிலையினின்றும் நழுவுங்கால் மாத்திரம் அவை உண்மைபோலத் தோற்றரவாகின்றனவேயொழிய தன்னியற்கைநிலையில் ஒர்போதுந் தோன்றா. ஏனெனில் பந்தமுத்திகள் யாருக்கென அம்முதலை விசாரிக்கின் சொருபமாக நானென்றதோர் பொருளே யின்றெனக் காண்போம். அப்பொழுது எஞ்சியபொருள் தான்றானாய் இருந்தபடி யிருந்திலகுவது அங்கைக்கனியாய் விளங்கும்.

254. பரிபாகமடைந்த அதிகாரிகளின் நிலை இரண்டு விதங்களாக உபயோகப்படுகிறது. கர்மத்தை விடுகிறது ஏகாந்த யோகத்திற்கும், கர்மத்தைச் செய்கின்றது மற்றவர்களின் நிமித்தத்திற்கும் என்றறியவேண்டும்.

255. முத்துக்குளிப்போர் தம்மிடையிற் கல்லைக் கட்டிக்கொண்டு மூழ்கிக் கடலடியிற் கிடக்கும் முத்தை எப்படியெடுக்கிறார்களோ, அப்படியே ஒவ்வொருவரும் வைராக்கியத்துடன் தன்னுள் ளாழ்ந்து மூழ்கி ஆத்மமுத்தையடையலாம். ஒருவன் தான் சொரூபத்தை யடையும் வரையில் நிரந்தர சொரூபஸ்மரணையைக் கைப்பற்றுவானாயின் அது வொன்றே போதும்.

256. கற்றவை யனைத்தையும் ஒருகாலத்தில் மறக்க வேண்டிவரும்.

257. பிரபஞ்சத்தை ஒரு சொப்பனத்தைப்போலெண்ணிக்கொள்ளவேண்டும்.

258. பிறர் எவ்வளவு கெட்டவர்களாய்த் தோன்றினும் அவர்களை வெறுக்கலாகாது. விருப்புவெறுப்புகளிரண்டும் வெறுக்கத்தக்கன.

259. பிரபஞ்ச விஷயங்களில் அதிகமாய் மனதை விடக்கூடாது. சாத்தியமான வரையில், அன்னியர் காரியத்திற் பிரவேசிக்கக்கூடாது.

260. பிறருக்கொருவன் கொடுப்பதெல்லாம் தனக்கே கொடுத்துக்கொள்ளுகிறான். இவ்வுண்மையை யறிந்தால் எவன்தான் கொடாதொழிவான் ?

261. எவ்வளவுக் கெவ்வளவு தாழ்ந்து நடக்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நன்மை யுண்டு.

262. மனதை யடக்கிக்கொண்டிருந்தால் எங்கேயிருந்தாலு மிருக்கலாம்.

263. எப்போதும் சர்வபரிபூரணமாகவுள்ள ஸ்வாத்ம பாவனையை மறவாதிருத்தலே [தன்னிலையில் நின்றிடலே] முடிவான கர்மமும், பக்தியும், யோகமும், ஞானமும் மற்றுமுள்ள எல்லா தபசுகளுமாம்.

ஸ்ரீ ரமணமஹர்ஷிகளின் உபதேசமொழிகள்

முற்றும்.



ஓம்

# முடிவுரை.

---

'அரிதரிது மானிடராதல் அரிது' என்றருளினார் நமது ஔவைப் பிராட்டியாரும். பெறுதற்கரிதான இம்மக்கட் பிறவியைப் பெற்ற நாம், ஜடமாகிய இச்சரீரத்தில் சச்சிதானந்த சொரூபியாயுள்ள தன்னை (ஆத்மாவை) தானே யறிந்து பேரின்பவீடெய்தலே முடிவான நோக்க மாகக் கொள்ளல் வேண்டும். கர்மம், பக்தி, யோகம், ஞான மென நிவிருத்தி மார்க்கங்கள் பலவாயினும் ஞானநெறி யாகிய 'நான் யார்' என்ற விசாரமே சிறந்ததெனப் பெரி யோர் கூறுகின்றனர். * சுருதிகளும் அவ்வாறே முறை யிடுகின்றன. நமது திருவருட் செல்வராம் ஸ்ரீ ரமண மஹர்ஷிகள் பின்பற்றின மார்க்கமும் இதுவேயாம். எனி னும், இதனை இவர் குருமுகமாகவாவது சாஸ்திர ஆராய்ச் சியினாலாவது அறிந்தவரல்லர். ஏதோ ஒரு தெய்வீக சக்தி தூண்ட, திடீரென்று தமக்குத்தோன்றிய மரணபயத்தின் காரணமாகத் தாம் வேறு ஜடமாம் இச்சரீரம்வேறுஎன்று உணரலானார்; அதன் பயனாக 'நான் யார்' என்ற விசாரம் தன்னில்தானாய் உதித்தது. இக் காரணத்தினால் இவர் ஒரு அவதார புருஷரென்று பலராலும் மதிக்கப்படுகின்றார்.

---

* இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத்தால், வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுநி யாஞ் சரீரத்தில், இந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டு மொன் றாக்கூடும், பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர் விசாரமதாமே." —கைவல்லியநவநீதம்.

வேதாந்த நூல்கள்யாவும் சிரவண, மனன, நிதித் தியாசனத்தையே மோக்ஷசாதனக் கிரமமாகக் கூறுகின்றன. அதாவது அவைகள் அனாத்மாவாகிய பஞ்சகோசங்களை நானல்லவென்று நேதிசெய்தபின்பு மிஞ்சியுள்ளசுத்த சூன்யத்தையும், "எது எதனை 'இது' என அறிகின்றதோ அது அதற்குச் சாக்ஷி ; அறியாதது சாக்ஷியன்று" என்னும் நியாயத்தால் கண்டித்து, அதன் சாக்ஷியும் விலக்ஷணமுமான ஸச்சிதானந்தசொரூபமாயுள்ள வறிவையே தானெனை இடைவிடாது செய்யும் ப்ரஹ்மத் தியானத்தையே விசாரமெனக் கூறுகின்றன. *"பரம பாவனை பரோக்ஷமாம் பின்பந்தப் பரோக்ஷமே யபரோக்ஷம், திரவிசாரமா ஞானமா முத்தியாந் தீர்வையீ தறிவாயே" என்றபடி நிரந்தரஞ் செய்யப்படும் இந்த ப்ரஹ்மபாவனை காலத்தில் சொரூபசாக்ஷாத்கார பதவியை யளித்திடுமென்பதிற் சிறிதும் சந்தேக மில்லை.

ஆயினும், மஹர்ஷிகளது விசாரமார்க்கம் இதனைப் பார்க்கினும் ஒருபடி உயரிய தெனலாம். எங்ஙனமெனின் இவரது மார்க்கம் இங்ஙனம் யூகத்தால் நேதிசெய்த பின்பு அவ்வஸ்துவை இப்படி யென்றும் அப்படியென்றும் பாவிப்பதன்று. ஆனால் சர்வ அறிவிற்கும் சர்வ தொழிலுக்குங் காரணபூதமான மனதின் உருவை, வாக்கினால் நானென்று சொல்லாமல் இப்பொழுது நானென்று எழுவதெது என்று அந்தர்முகப்பட்ட அதிசூக்ஷ்ம புத்தியால் உசாவுதலே ஞான விசாரமாம். இங்ஙனம் விசாரிக்கில், மனம் தன திருப்பிடமாகிய ஹ்ருதயத்தில்

---

* கைவல்லியநவநீதம்.

(ஆத்மாவில்) அடங்கவே, எப்போதுமுள்ள ப்ரஹ்மமே 'நான், நான்' என்று தானுகவே ஸதா ஜ்வலித்துக் கொண்டிருப்பதையுணரலாம். இதனையே ஞான சாஸ்திரங்கள் யாவும் 'தன்னைத்தான் அறித'லென்று கூறுகின்றன.

நிற்க, பகவானது மார்க்கம் சுலபமும், இனிமையும் வாய்ந்ததாயிருப்பதோடு, சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு மிகப் பொருத்தமுடையதாயுமிருக்கிறது. தேச, கால, ஆசன முதலிய நியமம் இதற்கு வேண்டியதின்று. எப்பொழுதும், எவ்விடத்தும் இதனைக் குற்றமின்றி அப்பியாசிக்கலாம். மனோநாசமே மோக்ஷமாதலான், இவரது மார்க்கம் சங்கற்ப விகற்ப வடிவாயுள்ள மனதை அதன் உற்பத்தி ஸ்தானத்திலே நசுக்கிவிடுவதால், வீடெய்த இது ஓர் நேர்மார்க்கமாவதோடு அப்பியாசிப்பதற்கு லகுவாயுமிருக்கிறது. முமுக்ஷுத்துவம், விவேகம், வைராக்கியமாகிய இச்சாமக்கிரி (சாதனங்)களையுடைய எவரும் இதனை அப்பியாசிக்கத் தகுதியுடையவராவர். மற்றப்படி, அவர், ஒன்றை நம்பவேண்டுமென்ருவது ஆசார நியமங்களுடையவரா யிருக்கவேண்டுமென்ருவது அவசியமில்லை. சுத்த நாஸ்திகராளுலும் இவர் விசாரமார்க்கத்தைப் பின்பற்றி உண்மைதனை அடையலாமெனின், ஆஸ்திகரைப் பற்றிச் சொல்வது அவசியமின்று. பகவான் ரமணருக்கு இவ்விசார மார்க்கம் தன்னில் தானய் உதித்தமையாலும், இதுகாறும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள மார்க்கத்தைப் பார்க்கிலும் ஒருபடி உயர்ந்ததாயிருப்பதாலும், இதனை 'ரமண வித்தை' யென்று தடையறச் சொல்லலாம்.

இச் சிறப்பு வாய்ந்த விசார மார்க்கத்தை யாவரும் எளிதில் உணரும் பொருட்டு, இவரது உபதேச மொழி

களை 'நான் யார்,' 'ரமண கீதை,' 'உபதேச வுந்தியார்,' 'உள்ளது நாற்பது,' 'விசார சங்கிரக வினாவிடை,' 'உபதேச மஞ்சரி' முதலிய இவரது நூல்கள் பலவற்றிலிருந்து திரட்டித் தொகுத்து சரிதையுடன் இப்புத்தக ரூபமாக வெளியிடலாயிற்று. ஆதலின், அன்பர்கள் யாவரும் இதனைப் படிப்பதுடன் நில்லாது, ஒவ்வொருவரும் தம்மாலியன்ற வளவு நாள்தோறும் அப்பியாசிப்பார்களாயின், இதனுண்மையை சொற்பகாலத்திலேயே யுணர்வார்களென்பது திண்ணம். இதுவே இப்புத்தக மெழுதியதின் முழுநோக்கமாகும். தமக்கொப்பாரும் மிக்காரு மிலரென மெய்ஞ்ஞான சூரியனைத் திருவருணையில் வீற்றிருக்கும் இன்னார் யாவரிடத்தும் மிக்க அன்பு வாய்ந்தவராயும், இனியவராயு மிருப்பதால், ஞானதாகங்கொண்ட உத்தமர்கள் இவ்வரிய சமயத்தை உயர்ந்த வழியிற் பயன்படுத்திக் கொள்ளுமாறு வேண்டுகின்றேன். எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் அருள் புரிக.

சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

முடிவுரை முற்றும்.

ஓம் தத் சத்



# * அனுபந்தம்

# 1

## (உபதேச வுந்தியாரின் ஒரு பகுதி)

15. மனவுரு மாயமெய்ம் மன்னுமா யோகி
தனக்கோர் செயலிலை யுந்தீபற
தன்னியல் சார்ந்தன னுந்தீபற.

16. வெளிவிட யங்களை விட்டு மனந்தன்
னொளியுரு வோர்தலே யுந்தீபற
வுண்மை யுணர்ச்சியா முந்தீபற.

17. மனத்தி னுருவை மறவா துசாவ
மனமென வொன்றிலை யுந்தீபற
மார்க்கநே ரார்க்குமி துந்தீபற.

18. எண்ணங்க ளேமனம் யாவினு நானெனு
மெண்ணமே மூலமா முந்தீபற
யானு மனமென லுந்தீபற.

19. நானென் றெழுமிட மேதென நாடவுண்
ணான்றலை சாய்ந்திடு முந்தீபற
ஞானவி சாரமி துந்தீபற.

20. நானொன்று தானத்து நானானென் றொன்றது
தானாகத் தோன்றுமே யுந்தீபற
தானது பூன்றமா முந்தீபற.

---

* பகவான் திருவாய்மலர்ந்தருளிய அப்பளப்பாட்டு ஆன்ம வித்தைகளுடன் உபதேச வுந்தியார், உள்ளது நாற்பது இவைகளிலிருந்து விசார மார்க்கத்தைக் கூறும் ஒரு பகுதிமட்டும் ஈண்டு எடுத்துக்கூறலாயிற்று. முழு நூல்களையும் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளது 'உபதேச நூன்மாலை'யிற் காண்க.

21. நானென்னுஞ் சொற்பொரு ளாமது நாளுமே
நானற்ற தூக்கத்து முந்தீபற
நமதின்மை நீக்கத்தா னுந்தீபற.

22. உடல்பொறி யுள்ள முயிரிரு ளெல்லாஞ்
சடமசத் தானதா லுந்தீபற
சத்தான நானல்ல வுந்தீபற.

23. உள்ள துணர வுணர்வுவே றின்மையி
னுள்ள துணர்வாகு முந்தீபற
வுணர்வேநா மாயுள முந்தீபற.

24. இருக்கு மியற்கையா லீசசீ வர்க
ளொருபொரு ளேயாவ ருந்தீபற
வுபாதி யுணர்வேவே றுந்தீபற.

25. தன்னை யுபாதிவிட் டோர்வது தானீசன்
றன்னை யுணர்வதா முந்தீபற
தானா யொளிர்வதா லுந்தீபற.

26. தானா யிருத்தலே தன்னை யறிதலாந்
தானிரண் டற்றதா லுந்தீபற
தன்மய நிட்டையீ துந்தீபற.



## 2

### (உள்ளது நாற்பதின் ஒரு பகுதி)

23. நானென்றித் தேக நவிலா துறக்கத்து
நானின்றென் ருரு நவில்வதிலை—நானென்
றெழுந்தபி னெல்லா மெழுமிந்த நானெங்
கெழுமென்று நுண்மதியா லெண்.

24. சடவுடனு னென்னுது சச்சித் துதியா
துடலளவா நானென் றுதிக்கு—மிடையிலிது
சிச்சடக்கி ரந்திபந்தஞ் சீவனுட்ப மெய்யகந்தை
யிச்சமு சாரமன மெண்.

25. உருப்பற்றி யுண்டா முருப்பற்றி நிற்கு
முருப்பற்றி யுண்டுமிக வோங்கு—முருவிட்
டுருப்பற்றுந் தேடினு லோட்டம் பிடிக்கு
முருவற்ற பேயகந்தை யோர்.

26. அகந்தையுண் டாயி னனைத்துமுண் டாகு
மகந்தையின் றேலின் றனைத்து—மகந்தையே
யாவுமா மாதலால் யாதிதென்று நாடலே
யோவுதல் யாவுமென வோர்.

27. நானுதியா துள்ளநிலை நாமதுவா யுள்ளநிலை
நானுதிக்குந் தானமதை நாடாம—னுதியாத்
தன்னிழப்பைச் சார்வதெவன் சாராமற் றூனதுவாந்
தன்னிலையி னிற்பதெவன் சாற்று.

28. எழும்பு மகந்தை யெழுமிடத்தை நீரில்
விழுந்த பொருள்காண வேண்டி—முழுகுதல்போற்

கூர்ந்தமதி யாற்பேச்சு மூச்சடக்கிக் கொண்டுள்ளே
யாழ்ந்தறிய வேண்டு மறி.

29. நானென்று வாயா னவிலாதுள் ளாழ்மனத்தா
னனென்றெங் குந்துமென நாடுதலே—ஞானநெறி
யாமன்றி யன்றிதுநா னமதுவென் றுன்னறுணை
யாமதுவி சாரமா மா?

30. நானு ரெனமனமுண் ணுடியுள நண்ணவே
நானு மவன்றலை நாணமுற—நானுனைத்
தோன்றுமொன்று தானகத் தோன்றினுநா னன்று
பூன்றமது தானும் பொருள். [பொருள்

31. தன்னை யழித்தெழுந்த தன்மயா னந்தருக்
கென்னை யுளதொன் றியற்றுதற்குத்—தன்னையலா
தன்னிய மொன்று மறியா ரவர்நிலைமை
யின்னதென் றுன்ன லெவன்.



## 3

### * அப்பளப்பாட்டு

பல்லவி.

அப்பள மிட்டுப் பாரு— அத்தைச்
சாப்பிட்டுன் னாசையைத் தீரு.

அனுபல்லவி.

இப்புவி தன்னி லேங்கித் திரியாமற்
சற்போ தசுக சற்குரு வானவர்
செப்பாது சொன்ன தத்துவ மாகிற
வொப்புயர் வில்லா வோர்மொழி யின்படி— அப்

சரணங்கள்.

தானல்லா வைங்கோச க்ஷேத்ர மிதில்வளர்
தானென்னு மானமாந் தான்ய வுளுந்தை
நானாரென் ஞான விசாரத் திரிகையி
னுனல்ல வென்றே யுடைத்துப் பொடித்து— அப்

சத்சங்க மாகும் பிரண்டை ரசத்தொடு
சமதம மாகின்ற ஜீரக மிளகுட
னுபரதி யாகுமவ் வுப்போ டுள்ளநல்
வாசனை யாம்பெருங் காயமுஞ் சேர்த்து— அப்

கன்னெஞ்சி னுறு னென்று கலங்காம
லுண்முக வுலக்கையா லோயா திடித்து
சாந்தமாங் குழவியாற் சமமான பலகையிற்
சந்ததஞ் சலிப்பற சந்தோஷ மாகவே— அப்

மோனமுத் ரையாகு முடிவில்லாப் பாத்ரத்தில்
ஞானக்னி யாற்காயு நற்பிரம்ம நெய்யதி
னுனது வாகவே நாளும் பொரித்துத்
தானே தானக புஜிக்கத் தன்மய— அப்

---

* அன்னை அழகம்மையார்க்காக ஆக்கப்பட்டது.

# 4

## * ஆன்மவித்தை

'ஐயே! மெத்த கடினம்' என்ற மெட்டு.

பல்லவி.

ஐயே! யதிசுலபம்—ஆன்மவித்தை
ஐயே! யதிசுலபம்.

அனுபல்லவி.

நோய்யார் தமக்குமுளங் கையா மலகக்கனி
பொய்யா யொழியமிகு மெய்யா யுளதான்மா (ஐயே)

சரணங்கள்.

1 மெய்யாய் நிரந்தரந்தா னையா திருந்திடவும்
பொய்யா முடம்புலக மெய்யா முளைத்தெழும்பொய்
மையார் நினைவணுவு முய்யா தொடுக்கிடவே
மெய்யா ரிதயவெளி வெய்யோன் சுயமான்மா—
விளங்குமே; இரு ளடங்குமே; இடரொடுங்
குமே; இன்பம் பொங்குமே. (ஐயே)

2 ஊனு ருடலிதுவே நானு மெனுநினைவே
நானு நினைவுகள்சே ரோர்நா ரெனுமதனு
ளுனு ரிடமெதென்றுட் போனு னினைவுகள்போய்
நானு னெனக்குகையுட் டானுய்த் திகழுமான்ம—
ஞானமே; இதுவே மோனமே; ஏக வானமே;
இன்பத் தானமே. (ஐயே)

---

* பல்லவி அநுபல்லவிகளைப்பாடிய பாரத்வாஜ - முகவைக் கண்ண முருகனுர் பகவான் சரணங்களை வேண்டிப் பெற்ருர்.

3 தன்னை யறிதலின்றிப் பின்னை யெதறிகிலென்?
றன்னை யறிந்திடிற்பின் னென்னை யுளதறிய?
பின்ன வுயிர்களில பின்ன விளக்கெனுமத்
தன்னைத் தனிலுணர மின்னுந் தனுளான்ம—
ப்ரகாசமே; அருள் விலாசமே; அக விநாசமே;
இன்ப விகாசமே. (ஐயே)

4 கன்மா திகட்டவிழ சென்மா திநட்டமெழ
வெம்மார்க் கமதனினு மிம்மார்க் கமிக்கெளிது
சொன்மா னததனுவின் கன்மா திசிறிதின்றிச்
சும்மா வமர்ந்திருக்க வம்மா வகத்திலான்ம—
சோதியே; நிதானு பூதியே; இராது பீதியே;
இன்பாம் போதியே. (ஐயே)

5 விண்ணா தியவிளக்குங் கண்ணா தியபொறிக்குங்
கண்ணா மனக்கணுக்குங் கண்ணாய் மனவிணுக்கும்
விண்ணா யொருபொருள்வே றெண்ணா திருந்தபடி
யுண்ணா டுளத்தொளிரு மண்ணா மலையெனுன்மா—
காணுமே; அருளும் வேணுமே; அன்பு பூணுமே;
இன்பு தோணுமே. (ஐயே)

அனுபந்தம்
முற்றும்.

ஓம் தத் சத்



திருவண்ணாமலை

# ஸ்ரீ ரமணாச்ரம புஸ்தகாலயம்

---

## தமிழ்

### பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளருளியவை

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ஸ்ரீ அருணாசலஸ்துதி பஞ்சகம் ... | 0 | 2 | 0 |
| உபதேசநூன்மாலை (உபதேசவுந்தியார், உள்ளது நாற்பது, அநுபந்தம், அப்பளப்பாட்டு, ஆன்ம வித்தை அடங்கியது) ... | 0 | 2 | 0 |
| அநுவாதநூன்மாலை (செய்யுள்) (தேவிகாலோத்தரம் - ஞானசாரவிசார படலம், ஸர்வஞானோத்தரம்-ஆத்மசாட்சாத்காரப் பிரகரணம், தக்ஷிணாமூர்த்திதோத்திரம், அத்தாமலகம், குரு ஸ்துதி சேர்ந்தது) ... | 0 | 2 | 0 |
| ஷை அநுவாதநூன்மாலை (வசனம்) (விவேகசூடாமணி, திருக்குதிருசிய விவேகம் சேர்ந்தது) ... | 0 | 6 | 0 |
| அருண்மொழித்தொகுப்பு (விசாரசங்கிரகம், நானார் அடங்கியது) ... | 0 | 2 | 0 |
| ஸ்ரீ ரமணநூற்றிரட்டு (ஷை ஐந்தும் அடங்கியது) ... | 1 | 0 | 0 |
| உபதேசவுந்தியாரும் கலிவெண்பாவும் ... ... | 0 | 1 | 0 |
| உபதேசஸாரம் (நாகரஸ்லோகமும் பாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பும்) ... ... | 0 | 1 | 0 |
| நான் யார்? ... ... ... | 0 | 0 | 6 |
| உபதேச மஞ்சரி ... ... ... | 0 | 1 | 0 |

## மஹர்ஷிகளது பக்தர்கள் செய்தவை

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீ ரமணவிஜயம் (ஜீவிய சரித்திரமும் உபதேச மொழிகளும்) இரண்டாம் பதிப்பு. | | ... | 2 | 0 | 0 |
| ஸத்தர்சனம் (நாகர ஸ்லோகமும் பாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பும்) Board | ... | ... | 0 | 8 | 0 |
| ,, ,, Wrapper | ... | ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீ ரமண சரித அகவல் | ... | ... | 0 | 3 | 0 |
| பகவான் ஸ்ரீரமண மஹர்ஷிகள் சரித்திரமும் உபதேச மொழிகளும் | | ... | 0 | 6 | 0 |
| திருவிளக்கைப் பாருங்கள் | ... | ... | 0 | 0 | 6 |
| ஸ்ரீ ரமணஸ்துதி பஞ்சகம் | ... | ... | 0 | 0 | 6 |
| ஸ்ரீ ரமணானந்த ஸ்தோத்திர பஞ்சகம் | ... | ... | 0 | 1 | 0 |
| ரமண நாற்பது ... | ... | ... | 0 | 1 | 0 |
| பெரியோர் வரலாறு ... | ... | ... | 2 | 0 | 0 |
| ஷை. மாணவர் பகுதி ... | ... | ... | 0 | 6 | 0 |
| கிரேக்கப் பெரியார் ... | ... | ... | 0 | 1 | 0 |

"தவிர தெலுங்கு, மலையாள, ஸம்ஸ்கிருத, கிரந்த ஆங்கில புத்தகங்களும், ஸ்ரீ பகவானின் போட்டோ படங்களும், ப்ளாக்கு படங்களும் கிடைக்கும். விபரம் தனி விலைப்பட்டியைப் பார்க்கவும். எழுதினால் விலைப்பட்டி அனுப்பப்படும்."

நிரஞ்ஜனானந்த ஸ்வாமி,

ஸர்வாதிகாரி,

ஸ்ரீ ரமணாச்ரமம், திருவண்ணாமலை.

---

* இது பகவான் மஹர்ஷிகளது உபதேசத் தொகுப்பு.